# முன்னுரை

காஞ்சிபுரம் பச்சையப்பன் உயர்நிலைப் பள்ளி மாணவர்கள் சென்ற ஆண்டு நடத்திய இலக்கியவிழாவில் பேசிய பேச்சு இது. பிற பள்ளிகளில் பேசிய பேச்சின் குறிப்புகளும் இதில் சேர்க்கப்பெற்றுள்ளன.

சென்ற சில ஆண்டுகளுக்குமுன், திருச்சி புனித சிலுவை கல்லூரி ஆண்டுவிழாவில் பேசிய பேச்சின் குறிப்புகளும் இந்நூலில் 'மாணவியருக்கு' என்ற பகுதியில் இடம் பெற்றுள்ளன.

ஒழுக்கக் கேடுகளை வெளியிடும் திரைப்படங்களைப் பார்த்தும், ஒழுக்கக்கேடுகளை எழுதும் சில கிழமை இதழ்களைப் படித்தும் கெடுகின்ற மாணாக்கர்களில், சிலரேனும் இந்நூலைப் படித்துத் திருந்துவார்களாயின் மகிழ்வேன்.

பள்ளியின் தலைமை ஆசிரியர் அவர்கள், இந்த ஒருமணி நேரப் பேச்சை ஒலிப்பதிவு செய்து கொடுத்து, நூலாக வெளியிட விரும்பி வேண்டியதால் இந்நூல் வெளிவருகிறது. இதற்காக அவரது அன்பிற்கும், அருந்தொண்டுக்கும் என் நன்றியையும் வணக்கத்தையும் கூறுகிறேன்.

என்னுடைய 23 நூல்களையும் வெளியிட்டு, இந்நூலை இருபத்து நான்காவதாக வெளியிட்டு மகிழ்கின்ற சென்னை பாரி நிலையத்தாருக்கும், இதனை அழகுற அச்சிட்டு உதவிய கவின்கலை அச்சகத்தாருக்கும், இதனைப் படித்துப் பயன் பெறுகின்ற மாணவ மாணவியர்க்கும் பிறர்க்கும் என் நன்றியும், வணக்கமும் உரியதாகட்டும்.

தங்களன்பிற்குரிய,

**கி. ஆ. பெ. விசுவநாதம்**

# மதிப்புரை

[பேராசிரியர் டாக்டர் **வெ. தெ. மாணிக்கம்**
எம்,ஏ., பிஎச்.டி.. தமிழ்த்துறைத் தலைவர்,
பச்சையப்பன் கல்லூரி. சென்னை-30,]

**'இன்சொல் விளைநிலமா ஈதலே வித்தாக
வன்சொல் களைகட்டு வாய்மை எருவட்டி
அன்புநீர் பாய்ச்சி அறக்கதிர் ஈன்றதோர்
பைங்கூழ் சிறுகாலைச் செய்.'**

—அறநெறிச்சாரம்

முனைப்பாடியார் இளமையில் அறம் செய்வதை வலியுறுத்துகிறார். முதிர்ந்த வயதிலும் அறஞ்செய்வதில் முனைந்துள்ளார் முத்தமிழ்க்காவலர் கி.ஆ.பெ. விசுவநாதம் அவர்கள். இளஞ்சிறார்களைக் கல்வியின் வழியே மாண்புடையவர்களாக ஆக்கும் பருவமே 'மாணாக்கப் பருவம்'. இன்றைய மாணாக்கன் நாளைய சமுதாயத்தின் தலைவன். ஒரு சமுதாயத்தின் உயர்வும் தாழ்வும் அதன் இளைய தலைமுறையினராகிய மாணாக்கரைச் சார்ந்தே அமைகிறது. எனவே, அவர்கட்குக் கல்வியும், ஒழுக்கமும், மொழிப்பற்றும் ஊட்டி நன்முறையில் உருவாக்க வேண்டியது சான்றோர் கடன். பள்ளிப்பருவத்தின் விளிம்பில் நிற்கும் மாணாக்கர்களிடம் துடிப்பும், வேகமும், அஞ்சாநெஞ்சுடன் செயலாற்றும் திறமும் காணப்பெறும். இதனையே 'ஓடுகிற பாம்பை மிதிக்கின்ற வயது' என்பர். இந்நிலையில் சமுதாயத்தின் நல்லன அல்லன இரண்டுமே அவர்களைக் கவரும். அதிலும் தீய சக்திகளே அவர்களை எளிதில் ஈர்க்கும் இயல்பின. எனவே,

அவர்களை நன்னெறிப்படுத்த வேண்டுவது இன்றியமையாத தாகும். அவ்வகையில் மேனிலைக்கல்வி பயிலும் மாணாக்கர்களுக்கு ஏற்றதொரு நூலாக அமைந்து விளங்குவது இந்நூல்.

அறிஞர் கி.ஆ. பெ அவர்கள் தமிழ்மொழி, தமிழ் நாடு, தமிழ் மக்கள் பற்றிய எண்ணமே மூச்சாகவும், பேச்சாகவும் கொண்டவர். 1938-ஆம் ஆண்டிலிருந்தே இந்தித் திணிப்பை எதிர்த்துப் போராடி வருபவர். வானொலியில் தமிழுக்கு உரிய இடம் கிடைக்கப் போராடி 1959-இல் சிறைசென்றார். இன்றும் தமிழுக்கு இடர் நேரின் வீறுகொண்டெழும் நெஞ்சினர். அவர் தாமே முயன்று தமிழ் கற்றார்; அறிஞர் தொடர்பால் அறிவை வளர்த்துக் கொண்டார். தமிழைக் காக்க, வளர்க்க, நிலைப்படுத்தத் 'தமிழர் கழகம்' முதலான பல அமைப்புகளை நிறுவி வளர்த்தவர். இவர் காஞ்சிபுரம் பச்சையப்பன் உயர்நிலைப்பள்ளி மாணாக்கர்களுக்காக ஆற்றிய சொற்பொழிவின் எழுத்து வடிவமே இந்நூல்.

பேரறிஞர் கி.ஆ.பெ. அவர்கள் பேச்சிலும் எழுத்திலும் வல்லவர். தமது 22-ஆவது வயதில் மேடையேறிய அவர் இன்றுவரை ஆற்றியுள்ள பொழிவுகள் எண்ணிலடங்கா. அவர் பேசவிருக்கும் கருத்தைத் தொடக்கத்திலேயே சுட்டிக் காட்டுவர். சொற்பொழிவை எடுப்பு, தொகுப்பு என்ற முறையில் அழகாகத் தொடங்கி, கருத்துச் செறிவோடு, புன்னூற் புலமை வெளிப்பட, நகைச்சுவை கெழும, விளக்கக் கதைகளுடன் கூறிச் செல்லும் விசுவநாதம் அவர்கள், அதனைப் பாங்குற முடிப்பதிலும் வல்லவர். அவரது சொல் லாற்றலுக்கு இந்நூல் சிறந்த உரைகல் எனலாம்.

''தலைப்பு ''மாணவரும் தமிழும்', பேசுகின்ற நேரம் அறுபது மணித்துளிகள். பேச்சின் கருத்து தமிழ்மொழி மிகவும் உயர்ந்தது என்பது. பேசுவதின் நோக்கம் மாணாக்கர் களாகிய நீங்கள் தமிழ்மொழியை விரும்பிப் படிக்க வேண்டும்

என்பது" (ப.2) என்று தொடங்குவதிலிருந்து கி.ஆ.பெ அவர்கள் எப்பேச்சையும் பகுத்தும் தொகுத்தும் கூறும் பண்பாளர் என்பது அங்கை நெல்லி.

"உங்களைப் பெற்ற நாடும் வளர்த்த மொழியும் பயிற்றுவித்த பள்ளியும் பெருமையடைய வேண்டும்... இந்தப் பெருமைகளைத் தேடித்தரவேண்டிய பொறுப்பு உங்களுடையது" (ப. 2, 3) என்று அப் பெருமகனார் மாணாக்கர் தம் பொறுப்பினை உணர்த்துகின்றார். "மாணாக்கன் என்ற சொல் நிறைந்த பொருளுடையது, 'மாண்புடையவர்களாக ஆக்குகின்ற பருவமே மாணாக்கர். மாணாக்கியர் என்ற பருவம்" (ப. 4) என்று கூறி, மாண்புடைமைக்குக் கல்வி. ஒழுக்கம்—இவற்றின் இன்றியமையாமையை எடுத்துக் கூறுகின்றார். 'கேடில் விழுச் செல்வம்' என்று வள்ளுவரும், 'ஈடு இலாச் செல்வம்' என்று திரு. வி. க.வும் போற்றிய கல்வியின் பெருமையை, 'வெள்ளத்தால் போகாது, வெந்தணலால் வேகாது' என்ற பழம்பாடற் கருத்தைக் காட்டி, குறள்நெறி நின்று விளக்குகிறார். மேலும், கல்லாமையின் இழிவை, செல்வந்தர் முன்னே வறியவன் நிற்பது காணக் கூடிய காட்சியே; ஆனால் கற்றவர் முன்னே கல்லாதவன் நிற்பது காணச் சகியாத காட்சியாகும்" (ப. 22) என்று எதிர் மறையாக எடுத்துக்காட்டிக் கல்வியின் இன்றியமையாமையை உணர்த்தியுள்ளமை அவர் திறமைக்குச் சான்று.

மாணாக்கர் கல்வியுடன் ஒழுக்கத்தையும் பயில வேண்டும் என்று கி. ஆ. பெ. பலவாறு வலியுறுத்துகிறார். விழுப்பம் தரும் ஒழுக்கத்தை உயிரினும் மேலாகப் போற்ற வேண்டும் என்பதை,

> "ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை: இழுக்கத்தின்
> எய்துவர் எய்தாப் பழி."

என்று பொய்யில் புலவன் வழிநின்று விளக்குகிறார். ஒழுக்கம் இழந்தவன் தான் செய்யாது பிறர் செய்த பழியை யும் ஏற்க வேண்டிவரும் என்று, 'எய்துவர் எய்தாப் பழி' எனும் தொடருக்குக் கூறியுள்ள விளக்கம் அவர்தம் நுண்மாண் நுழைபுலத்திற்குச் சான்று (ப. 20)

''பொய்யைச் சொல்லாதே, புலாலை உண்ணாதே,
கள்ளைக் குடியாதே, களவை நினையாதே,
கர்மம் கொள்ளாதே, கொலையைச் செய்யாதே,
சூதை விரும்பாதே, சிற்றினம் சேராதே,
புறங் கூறாதே, பொறாமை அடையாதே''

என்று தமிழ்மறை கூறும் பத்துக் கட்டளைகளை ஒழுக்க நெறிகளாகப் பின்பற்றுமாறு மாணாக்கர்க்கு அறிவுறுத்து கிறார் (ப. 20).

மாணாக்கர் ஒவ்வொருவரும் ஒவ்வொரு வகையில் ஆற்றல் மிக்கவராக விளங்குவர். அவர்தம் திறமையறிந்து ஊக்குவிக்க வேண்டும். 'கூர்மையான அறிவுடைய மாணாக் கர் தமது அறிவுக்கு வேலை கொடுத்துக்கொண்டே இருக்க வேண்டும். அல்லது ஏதேனும் ஓர் இயக்கத்தில் தம்மை ஈடுபடுத்திக் கொள்ள வேண்டும். இல்லையேல் தனிமை அவர்களைத் தவறான வழிகளில் ஈடுபடுத்திவிடும்'' என 'அல்லி' எனும் புதினத்தில் அறிஞர் மு.வ. குறிப்பிடுவார். கி.ஆ.பெ. அவர்கள் மாணாக்கர் பேச்சாற்றல், எழுத்தாற்றல் முதலியனவற்றை வளர்த்துக் கொள்ளுமாறு அறிவுறுத்துவ தோடு, அதற்கான வழிமுறைகளையும் விளக்குகிறார். ''சொற்பொழிவு என்பது உயர்ந்த சொற்களைத் தேடிப் பிடித்து ஒன்றின்பின் ஒன்றாக முறைப்படுத்தி அமைத்து, உரத்த குரலில் கூட்டத்தில் கடைசியில் உள்ள மக்களைப் பார்த்தும், சில சமயங்களில் இடதுபுறமும், வலதுபுறமும் பார்த்தும் ஒரு வரம்புக்கு உட்பட்டுப் பிழையின்றிப் பேசுவதே

ஆகும்'' (ப. 35). சொற்பொழிவுக்கே இலக்கணமாக அமையும் பகுதி இதுவாகும். மேடைப் பேச்சாளர் ஒவ்வொரு வரும் கடைப்பிடிக்க வேண்டிய முறைஇது.

அவ்வாறே எழுத்துக்கும் இலக்கணம் கூறியுள்ளார் கி.ஆ.பெ. ''உயர்ந்த உள்ளத்தைப் பெற்று, நிறைந்த கருத்துக்களைத் தேடி, சிறந்த சொற்களைக் கொண்டு, குறைந்த எழுத்துக்களால் எழுதப்படுவதே எழுத்து என்றாகும். அவ்வாறு எழுதுபவனே எழுத்தாளன்'' (ப. 25.) எழுத்தாளனுக்குக் கூடாத பண்புகளைப் பக்கம் 26-இல் பட்டியலிட்டுத் தருகிறார். வால்டேரின் கருத்தைக் கொண்டு எழுத்தின் வலிமையை, 'வாள் முனையைவிடப் பேனா முனையே அதிக வலிமையுடையது' என்று உணர்த்தியுள்ளார் (ப. 29).

கல்வி, ஒழுக்கம் முதலியவற்றின் இன்றியமையாமையை விளக்கி, மாணவரை நெறிப்படுத்தும் கி. ஆ. பெ. அவர்கள் மாணாக்கர்கட்குத் தாய்மொழிப் பற்றின் இன்றியமை யாமையை நன்கு விளக்குகின்றார். ஒரு மொழி அழிந்தால் அந்த இனம் அழியும், அவர்கள் வாழும் நாடும் பாழ்படும் என்று மொழியுணர்வின் சிறப்பை வலியுறுத்துகிறார். தமிழ் மொழியின் சிறப்புகளைத் திறம்படக் காட்ட முற்பட்டு, நம் தாய்மொழியாகிய தமிழில் 86,000 சொற்கள் உள்ளன; இலட்சக்கணக்கான சொற்களை உடையதெனக் கூறப்படும் ஆங்கிலத்திலும் அம்மொழிக்கே உரிய சொற்களைக் கணக் கெடுத்தால் 20,000-க்கு மேல் இல்லை என்று அமெரிக்க, இங்கிலாந்து அறிஞர் தம் கூற்றுக்களைக் கொண்டு நிறுவுகிறார்.

பிற நாட்டு இலக்கியங்களெல்லாம் அரசியல், சமயம் முதலிய பிற துறைகளைச் சார்ந்தே ஒழுக்கத்தை வளர்க் கின்றன. ஆனால் தமிழ்மொழியில் மட்டுமே ஒழுக்கத்தையே பொருளாகக் கொண்ட இலக்கியங்கள் உள, இவ்வாறு

மொழியாலும் இலக்கிய வளத்தாலும் மட்டுமின்றிப் பண்பாட்டுச் சிறப்பாலும் நாம் பெருமையுடையவர்கள். நம் தமிழ்மொழி, தனக்கெனத் தனித்த உயரிய பண்பாட்டினை உடையது. தமிழர் கண்ட இசை ஏழு; சுவை ஆறு; நிலம் ஐந்து; காற்று நான்கு. இவற்றை உலக அரங்கே ஒப்புக் கொள்கிறது, அவ்வாறே மொழியை மூன்றாக, இலக்கணத்தை இரண்டாகக் கண்டு மொழியை வளர்த்தனர். ஒழுக்கத்தையும் இறைவனையும் ஒன்றாகவே கண்டு பண்பாட்டை வளர்த்தனர். என்று தமிழின் அரும்பெரும் சிறப்புகளை எண்களை நிரல்பட வைத்து விளக்கியுள்ள திறம் போற்றற்குரியது. மேலை நாடுகளெல்லாம் தந்தம் தாய்மொழியிலேயே பயிற்றுவித்து விஞ்ஞானத்தில் முன்னேறி வரும் இந்நாளில், நாம் மட்டும் அந்நிய மொழியை வளர்த்து அவலத்துக்கு ஆளாகிறோமே எனக் கவல்கிறார் (ப. 46).

தமிழ் வாழ வழிகூறும் இப் பேரறிஞர். தமிழைத் திருத்தமுற எழுத வேண்டும் என வலியுறுத்துகிறார்.

**''கொம்புசுழி கோணாமல் கொண்டகோல் சாயாமல்**
**அம்புகோல் கால்கள் அசையாமல்—தம்பிநீ**
**எழுதினால் வாழ்வுண்டு வளமுண்டு புகழுண்டு**
**இன்றேல் உனக்கு எதுவுமில்லை''**

(ப. 24)

என்ற பாடலைத் 'தந்தை சொல் மிக்க மந்திரமில்லை' என மதித்து எடுத்துக் காட்டுகிறார்.

மாணாக்கியருடைய கல்விப் பருவத்தை 'Y' என்ற ஆங்கில எழுத்தோடு ஒப்பிட்டு விளக்குகிறார் ஆசிரியர். இப்பகுதி படிக்கவும், சிந்திக்கவும், ஏற்கவும் ஏற்றதாகும் (ப. 60), ''மாணவர்கள் எதிர்காலத் தலைவர்கவ் என்பது தவறு; இக்காலத் தலைவர்கள் என்பதே பொருந்தும்... நீங்கள் நினைத்தால்தான் சாலைகளில் பேருந்தும் ஓடு

கின்றன. இல்லாவிட்டால் அவை அடிபட்டு நின்று விடுகின்றன.'' மாணவர்தம் ஆற்றலை— அவ்வாற்றல் தவறாகப் பயன்படும் விதத்தை நகைச்சுவை மிளிரக் குறிப்பிட்டுள்ள அழகே அழகு! (ப, 8) ''நெற்கதிர்களைத் தேய்த்து உமியை ஊதிவிட்டால் அரிசிகள் காணப்படவேண்டும். எழுத்துக்களைப் படித்து நீக்கிவிட்டால், கருத்துக்கள் காணப் பட வேண்டும். இன்றேல் நெற்பதரைப் போல இதுவும் பதராகிவிடும்'' (ப. 25) என்று தாழ்ந்த தமிழுரைத் தலை நிமிர்ந்து நிற்கச் செய்யும் உவமைச் சிறப்புணர்க. இவ்வாறு கி.ஆ.பெ. அவர்களின் பேச்சில் பன்னூற் புலமை, உவமை நலம், நகைச்சுவை உணர்வு, புள்ளி விவரக்குறிப்பு முதலியன பொதுளக் காணலாம்.

மாணவர் தமிழுணர்வொடு நெஞ்சில் உரமும் நேர்மைத் திறமும் கொண்டு, குன்றா ஒழுக்கமும் கொள்கைப் பிடிப்பும் உடையவராய் வாழ்ந்து சிறக்க வழிகாட்டும் இம்மூதறிஞர் வழிநின்று தமிழகம் சிறப்பதாக!

சென்னை
23-2-88

அன்புள்ள,
**வெ. தெ. மாணிக்கம்**

# மாணவர்களுக்கு

காஞ்சீபுரம் கொடைவள்ளல் பச்சையப்பர் பெயரால் தோன்றியுள்ள உயர்நிலைப்பள்ளியின் மாணவர்களாகிய நீங்கள் இன்று ஒரு இலக்கிய விழாவைக் கொண்டாடிக் கொண்டிருக்கிறீர்கள். இவ்விழாவில் கலந்து கொள்ளும் பேறு 200 மைல்களுக்கு அப்பால் உள்ள எனக்கும் கிடைத்திருப்பது குறித்து மகிழ்ச்சியடைகிறேன். அதைவிட மாணவர்களாகிய உங்களுடன் பேச வாய்ப்பு கிடைத்திருப் பதை எண்ணும்போது எனக்கு இன்னும் அதிக மகிழ்ச்சி உண்டாகிறது. இறைவனைப் பற்றிப் பேசாத நாளெல்லாம் பிறவா நாளே என்பதும், மாணவர்களோடு பேசாத நாட்களெல்லாம் பிறவா நாட்கள் என்பதும் எனது கருத்து. இத்தகைய ஒரு நல்ல வாய்ப்பை எனக்கு உருவாக்கிக் கொடுத்த உங்கள் பள்ளி முதல்வருக்கு என் நன்றி.

இவ்விழாவின் தலைவர் டாக்டர் சிற்சபை அவர்களின் பேச்சு நன்றாக இருந்தது. என்னைப் பற்றிப் பேசிய பேச்சுகளில் கொஞ்சம் உண்மையும் கலந்திருந்தால் அப்பேச்சு இன்னும் நன்றாக இருந்திருக்கும். ஏதோ என் மீதுள்ள அன்பால் அவர்தம் உள்ளத்தில் உள்ளதையெல்லாம் உங்களிடம் கொட்டிக் குவித்துப் பேசி விட்டார்கள். இருந்தாலும் அவைகளையெல்லாம் இனிமேலாவது நான் செய்யவேண்டும் என்று நல்ல தமிழாலே வாழ்த்தியிருக் கிறார்கள் என்று எண்ணி, வணக்கத்தோடு அவைகளை ஏற்றுக் கொள்ளுகிறேன். அவர்கள் எண்ணம் இனியாகிலும் நிறைவேறட்டும்.

பேச்சின் தலைப்பு 'மாணவரும் தமிழும்'. பேசுகின்ற நேரம் அறுபது மணித்துளிகள். பேச்சின் கருத்து தமிழ் மொழி மிகவும் உயர்ந்தது என்பது. பேசுவதின் நோக்கம் மாணவர்களாகிய நீங்கள் தமிழ் மொழியை விரும்பிப் படிக்கவேண்டும் என்பது. பேச்சின் பயன் என்னைப் பொறுத்ததல்ல; அது உங்களிடத்தில் எதிர்காலத்தில் தோன்ற வேண்டிய ஒன்று.

பேசத் தொடங்குமுன் ஒரு அறிவுரை அல்ல, அறவுரை கூறுகிறேன்.

## அறவுரை

நீங்கள் ஒரு நல்ல நாட்டிலே பிறந்திருக்கிறீர்கள். 'தமிழ்நாடு'. நீங்கள் ஒரு நல்ல மொழியைத் தாய்மொழி யாகப் பெற்றிருக்கிறீர்கள். 'தமிழ் மொழி'. நீங்கள் ஒரு நல்ல மேல்நிலைப் பள்ளியில் பயின்று கொண்டிருக்கிறீர்கள். 'பச்சையப்பன் மேல்நிலைப்பள்ளி'. இவற்றை எண்ணிப் பெருமையடைய உங்களுக்கு உரிமை உண்டு. ஆனால் இப்பெருமை போதுமா? போதாது. உங்களைப் பெற்ற நாடும், வளர்த்த மொழியும், பயிற்றுவித்த பள்ளியும் பெருமையடைய வேண்டும்.

நீங்கள் பள்ளிப்படிப்பை முடித்து வெளிநாடுகளிற் சென்று பணிபுரியும்போது, 'இவன் தமிழ்நாட்டான்' எனும் பொழுது உங்களைப் பெற்ற நாடு பெருமைப்படும். நீங்கள் தமிழ் இலக்கியங்களிலே படித்த உயர்ந்த கருத்துக்களை யெல்லாம் பிற மொழிகளிலே வடித்துத் தருகின்ற பொழுது உங்களை வளர்த்த மொழி பெருமையடையும். நீங்கள் படிப்பை முடித்து பம்பாயிலோ, கல்கத்தாவிலோ, லண்டனிலோ, பாரீசிலோ பணிபுரியும் பொழுது. இவன்

என் பள்ளி மாணவன் என்று இப்பள்ளி பெருமையடையும். இந்த பெருமைகளைத் தேடித் தரவேண்டிய பொறுப்பு உங்களுடையது என்பதை, இன்று உங்கள் பிஞ்சு உள்ளத்தில் பதியவைத்துக் கொள்ள வேண்டும். இதுவே எனது முதல் அறவுரை.

## மாணாக்கர்

உலகில் பேசப்படுகின்ற மொழிகள் இரண்டாயிரத்து இருநூறுக்கு மேற்பட்டவை என்பதும், அவற்றுள்ளும் எழுத்துள்ள மொழிகள் எண்ணூறுக்கும் உட்பட்டவை என்பதும், அவற்றுள்ளே இலக்கண இலக்கியம் படைத்துள்ள மொழிகள் இருநூற்றுக்குச் சற்று அதிகமானவை என்பதும் உலக மொழியறிஞர்களின் கருத்து. இத்தனை மொழி களுக்கும் இல்லாத ஒரு தனிப்பெருஞ்சிறப்பு தமிழ்மொழி ஒன்றுக்கு மட்டுமே உண்டு.

நம் தாய்மொழியாகிய தமிழ் மொழிக்கு எண்பத்து ஆறாயிரத்து இருநூறு சொற்கள் உள்ளன. இவை அனைத்தும் தமிழ்மொழிக்கே உரிய சொந்தச் சொற்கள். இந்த அளவு அதிக எண்ணிக்கையுடைய சொந்தச் சொற்கள் உலகில் உள்ள எந்த மொழிக்கும் இல்லை. ஆங்கில அகராதியில் இலட்சக்கணக்காண சொற்கள் காணப்படு கின்றன. அவை அனைத்தும் ஆங்கில மொழிக்குரிய சொந்தச் சொற்கள் அல்ல. இருபதினாயிரத்துக்கு மேல் இல்லை என்றே இங்கிலாந்திலும், அமெரிக்காவிலும் உள்ள ஆங்கில மொழிப் பேராசிரியர்கள் கூறுகிறார்கள்.

இது தமிழ்மொழிக்கு உரிய ஒரு தனிப்பெருஞ் சிறப்பு. இதை எண்ணி மாணவர்களாகிய நீங்கள் பெருமையடைய வேண்டும். இன்னும் ஒன்று. இந்த எண்பத்து ஆறாயிரத்து இருநூறு சொற்களும், 'பொருள் அமைதி' உடையன என்று, மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே வாழ்ந்த தொல்காப்பியர் கூறியுள்ளார். "எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே' என்பது தொல்காப்பியரது நூற்பா. இந்த எண்பத்து ஆறா யிரத்து இருநூறு சொற்களில் எந்தச் சொல்லும் பொருளற்ற தல்ல என்பது அவரது முடிவு.

இசை என்பது இரண்டெழுத்து உள்ள ஒரு சொல். அதன் பொருள் பாடகன், அவனது தொண்டை, பாட்டு, பாடும் தன்மை, பக்க இயம், பண், சுதி, தாளம், கேட்போர் உள்ளம் அனைத்தும் ஒன்றாக இசைய வேண்டும். அப்போது தான் அதற்கு இசை என்று பொருள். இல்லாவிடில் "இரைச்சல்" என்றே பொருள்படும்.

மாணாக்கன் என்ற சொல்லும், நிறைந்த பொருளமைதி உடைய ஒரு சொல். மாண்புடையவனாக ஆக்குதல் என்றே பொருள் தரும். இதைவிட பெண் பிள்ளைகளை மாணாக்கியர் என்பது இப்பொருளையே நன்கு விளக்குவ தாக இருக்கும். இப்பெருமை இப்பருவத்தில்தான் இருக்கும். இதற்கு முன்புமிராது, பள்ளிப் படிப்பை முடித்த பின்பும் வாராது. மாண்புடையவர்களாக ஆக்குகின்ற பருவமே மாணாக்கர், மாணாக்கியர் என்ற பருவம். ஆகவே இப் பருவகாலத்தை நீங்கள் நன்கு பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

# இலக்கியம்

இன்று இங்கு இலக்கிய விழா. இலக்கியம் என்றால் என்னவென்று நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டும். உலகில் பல மொழிகளுக்கு இலக்கியங்கள் உள்ளன. அவை அனைத்தும் பல கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டவை. ஆனால், நம் தமிழ்ச்சான்றோர் கண்ட இலக்கியங்கள் அத்தனையும் ஒழுக்கத்தையே அடிப்படையாகக் கொண்டவை.

உலகில் நூல் நிலையங்கள் பல. அவற்றுள் முதல் நூல் நிலையத்தைத் தொடங்கி வைத்த நாடு ரோமாபுரி. ரோம் நகரில் உள்ள பாதிரிமார்கள்தான் முதன்முதலில் நூல் நிலையத்தை அமைத்தார்கள். பல ஆண்டுகளுக்குப் பின்னர், இங்கிலாந்து அதைப் பெரிதாக்கிப் பெருமை பெற்றது. கடந்த சில ஆண்டுகள்வரை அமெரிக்கா நூல் நிலையத்திலேயே ஒரு பெரிய அரசனாக விளங்கியது. இன்று இரஷ்யா ஒன்றுதான் நூல் நிலையத்தில் ஒரு சக்கரவர்த்தியாகக் காட்சியளிக்கிறது. அங்குள்ள நூல் நிலையத்தில் இருக்கும் புத்தகங்களை நீளமாக அடுக்கி வைத்தால் 36,000 மைல் நீளம் வரும். உலகத்தை ஒரு சுற்றுச் சுற்றினால் 24,000 மைல்கள். அங்குள்ள நூல்களின் நீளம் ஒன்றரை உலகத்தின் நீளம். அங்கு உள்ள ஒரு படிப்பகத்தின் அறையில் 500 பேர்கள் தங்கியிருந்து படிக்கலாம். 500 மேசைகள், 500 நாற்காலிகள். மேசைகளையும், நாற்காலிகளையும் எடுத்துவிட்டால் 1,500 பேர் உட்கார்ந்து படிக்கக்கூடிய அளவில் உள்ளது அப்படிப்பகம் இத்தகைய படிப்பக அறைகள் 51. அந் நூல் நிலையத்தைச் சுற்றி இருக்கின்றன என்றால், உங்கள் உள்ளத்தில் சிறிது நினைத்துப் பாருங்கள். அது எவ்வளவு பெரிய நூல் நிலையம் என்று.

இரஷ்யா இன்று உலகில் சிறந்து விளங்குவதற்கு அடிப் படைக் காரணம் அது நூல் நிலையங்களைப் பெருக்கியது தான். "ஒரு வாசகசாலையைத் திறக்கிறவன் ஒரு சிறைச் சாலையை மூடுகிறான்" என்பது ஒரு அறிஞனின் கருத்து. இதை அறிந்தே இரஷ்யமக்கள் வீதிதோறும் நூல் நிலையங் களை அமைத்தார்கள். மக்கள் அவற்றைப் பயன்படுத்திக் கொண்டார்கள். அறிவுடையவர்களாக ஆனார்கள். தொழிலைப் பெருக்கினார்கள். பொருளாதாரத்தைப் பெருக்கினார்கள். இன்று ஆயுதங்களையும் பெருக்கி வைத்து அமெரிக்காவுக்கு எதிராக சமமாக நிற்கிறார்கள். இத்தகைய உயர்ந்த நிலைக்கு அம்மக்களின் அறிவைப் பெருக்கியதே அங்குள்ள நூல் நிலையங்கள் தான்.

அத்தகைய நூல் நிலையங்களுக்குச் சென்று, நான் சொல்லுகிற மாதிரி ஒரு புத்தகத்தை எடுங்கள் என்று கேட்டால், அந்நூல் நிலையத்தின் தலைவன் செயலாளன் மட்டுமல்ல அங்குள்ள நிலைப் பெட்டிகளைத் துடைக்கிற ஆள் சொல்லி விடுவான் "நீங்கள் கேட்கிற மாதிரி ஒரு நூல் இங்கு இல்லை" என்று. நீங்கள் எப்படிக் கேட்க வேண்டும். அரசியலுக்குப் புறம்பாக, மதத்திற்குப் புறம் பாக, விஞ்ஞானத்துக்குப் புறம்பாக, வரலாற்றுக்குப் புறம்பாக, மருத்துவத்துக்குப் புறம்பாக, ஒழுக்கத்தைப் பற்றி மட்டும் சொல்லுகிற ஒரு நூலை எடுங்கள் என்று கேளுங்கள். இல்லை என்றே விடை வரும். ஆனால் தமிழ்ச் சான்றோர்கள் ஒழுக்கத்தைப் பற்றி எழுதிய தமிழ் இலக்கியங்கள் ஒன்றல்ல, பல இலக்கியங்கள் நம்மிடையே உள்ளன. அவை ஆத்திசூடி, கொன்றை வேந்தன், நல்வழி, நன்னெறி, இன்னா நாற்பது, இனியவை நாற்பது, கார் நாற்பது, களவழி நாற்பது, ஏலாதி, இன்னிலை,

திரிகடுகம், நான்மணிக் கடிகை, நாலடியார், திருக்குறள் முதலியன. அரை ரூபாயிலிருந்து ஐந்து ரூபாய் வரை எத்தனையோ இலக்கியங்கள் நம்மிடையே உள்ளன. இவை அனைத்தும் நம் மொழியில் உள்ள இலக்கியங்கள். இவையத்தனையும் ஒழுக்கம் ஒன்றையே அடிப்படையாகக் கொண்டவை. இவற்றைச் செய்தவர்கள் தமிழ்ச் சான்றோர் கள். மக்கட்கு எது தேவையில்லை என்றாலும் "ஒழுக்கம் தேவை" என்பது அவர்களது முடிவு. இதனாலேயே தமிழ் இலக்கியங்கள் பிறமொழி அறிஞர்களால் பாராட்டப்பெற்று வருகின்றன.

மனிதன் ஒழுக்கத்தினால் தான் உயர்வடைகிறான். ஒழுக்கத்தை உயர்த்துவதற்காகத்தான் தமிழ் இலக்கியங்கள் தோன்றித் துணை செய்கின்றன. இதைக் கற்றுக் கொள்ளத் தான் நீங்கள் இந்த இலக்கிய விழாவில் கலந்து கொள்கிறீர் கள். ஆகவே நீங்கள் இலக்கியங்களைப் படித்துப் பயன் படுத்திக் கொள்வது நல்லது.

## எதிர்காலத் தலைவர்கள்

கல்லூரிகளுக்கு வந்து சொற்பொழிவாற்றும் அறிஞர்கள் மாணவர்களை நோக்கி, "நீங்கள் எதிர்காலத் தலைவர்கள், நீங்கள் எதிர்காலத் தலைவர்கள்" என்று கூறி வருகிறார்கள். இது தவறு. இதை நான் ஏற்றுக் கொள்வதில்லை.

உண்மையாகக் கூற வேண்டுமானால் நீங்கள் இக்காலத் தலைவர்கள், இப்போதே தலைவர்கள் என்று கூறியாக வேண்டும்.

ஏனெனில் நீங்கள் கைப்பிடியைப் பிடித்து இழுத்தால் தான் இரயில் நிற்கிறது. தண்டனையும் இல்லை. நாங்கள் இழுத்தால் இரயில் நிற்க மறுக்கிறது. நின்றாலும் அபராதம் கட்ட வேண்டியிருக்கிறது,

நீங்கள் நினைத்தால்தான் சாலைகளில் பேருந்துகள் ஓடுகின்றன. இல்லாவிட்டால் அவை அடிபட்டு நின்று விடுகின்றன.

நீங்கள் நினைத்தால் கல்லூரிகள் மூடுகின்றன. நினைத் தால்தான் திறக்கின்றன.

இத்தகைய ஆற்றல் படைத்த இக்காலத் தலைவர் களாகிய உங்களை, எதிர்காலத் தலைவர்கள் என்று கூறுவது சிறிதும் பொருந்தாது.

ஆகவே, இப்போதே தலைவர்களாகி விட்ட உங்களுக்கு சில பொறுப்புகள் வந்து விடுகின்றன. அவை பொறுமை, கட்டுப்பாடு, சிந்தனை, ஒழுக்கம் முதலியன. இவைகளை நீங்கள் இப்போதே ஏற்றுக்கொள்வதுதான் நல்லது.

## அரசியலில் தலையிடுதல்

''மாணவர்கள் அரசியலில் தலையிடலாமா?'' என்று சிலர் கேள்வி கேட்கிறார்கள். இது என்ன கேள்வி?

எத்தனையோ கலைகளைக் கற்று வருகின்ற மாணவர் கள் அரசியலையும் கற்றுக் கொள்வதால் என்ன தவறு? நன்றாகக் கற்று, அறிந்து கொள்ளலாம்.

ஆனால் செயற்படக்கூடாது. அரசியலில் தலையை இட்டால் காலைக் கல்லூரியிலிருந்து எடுத்துவிட வேண்டும்.

அரசியலில் தலையையும், கல்லூரியில் காலையும் வைத்துக் கொண்டு நடப்பது மாணவர்க்கு மட்டும் கேடு பயப்பதல்ல, நாட்டுக்கும் வீட்டுக்குமே கேடு பயப்பதாக முடிந்துவிடும்.

மற்போர் செய்கின்றவர்கள் உடலில் நல்ல வலுவை ஏற்றிக் கொண்ட பிறகே போருக்குச் செல்வதுபோல, கல்லூரியில் நன்கு படித்து முடித்து அறிவும் ஆற்றலும் பெற்ற பிறகே அரசியலில் தலையிடுவது பொருத்தமாக இருக்கும். அதை விட்டுவிட்டு கல்லூரியில் அரைகுறையாகப் படித்து விட்டு அரசியலில் புகுந்து கொண்டு ஆர்ப்பாட்டமும் போர்ப்பாட்டமும் பாடுவது நாட்டுக்கும் வீட்டுக்கும் நமக்கும் நலந்தராது.

## தமிழ் மக்கள் கண்டவை

தமிழ்ச் சான்றோர்கள் எதனையும் துருவி ஆராய்ந்து கண்டெடுத்து அவற்றைத் தொகைப்படுத்தி, வகைப்படுத்தி, பெயர்ப்படுத்தி, செயல்படுத்தியவர்கள். எடுத்துக்காட்டாக இசையை ஏழாகக் கண்டார்கள். குரல், துத்தம், கைக்கிளை, இழி, உழை, விளரி, தாரம் எனக் கண்டு 5000 ஆண்டு களாயின. எட்டாவது இசையை உலகின் ஐந்து கண்டங் களிலுமுள்ள 200க்கும் மேற்பட்ட மொழியினர் எவரும் இதுவரை காணவில்லை,

இசையை ஏழாகக் கண்டவர்கள்தான் சுவையை ஆறாகக் கண்டார்கள். இனிப்பு, புளிப்பு, கசப்பு, கார்ப்பு, உப்பு, உவர்ப்பு என. இன்றைக்கு இவ்வுலக மக்களின் எண்ணிக்கை

700 கோடி. இத்தனை நாக்குகளில் ஒன்றாவது ஏழாவது சுவையை இன்னும் காண முடியவில்லை. இதை நீங்கள் எண்ணி எண்ணி மகிழலாம்.

இசையை ஏழாக, சுவையை ஆறாகக் கண்டவர்கள்தான் நிலத்தை ஐந்தாகக் கண்டார்கள். மலையும், மலையைச் சார்ந்த இடமும் குறிஞ்சி, காடும் காட்டைச் சார்ந்த இடமும் முல்லை, நிலமும் நிலத்தைச் சார்ந்த இடமும் மருதம், கடலும் கடலைச் சார்ந்த இடமும் நெய்தல், மணலும் மணலைச் சார்ந்த இடமும் பாலை என்று. இதற்கு மேல் 5000 ஆண்டுகளாக உலகின் ஐந்து கண்டங் களிலுமுள்ள எந்த மக்களாலும் ஆறாவது நிலப்பரப்பைக் காண முடியவில்லை.

நிலத்தை ஐந்தாகக் கண்டவர்கள்தான் காற்றை நான்காகக் கண்டார்கள். நான் தில்லியில் சில நாட்கள் தங்கியிருந்தேன். காற்று மூன்று பக்கம்தான் வந்தது. ஒரு பக்கம் மலை. மலேசியாவில் சில மாதங்கள் இருந் தேன். காற்று இரண்டு பக்கம்தான் வந்தது. மற்ற இரு புறமும் மலைகள். மலையாளத்தில் ஒரு பக்கம்தான் காற்று வந்தது. மற்ற மூன்று பக்கமும் மலைகள். தமிழ கத்தில் நான்கு பக்கங்களிலுமிருந்து காற்று வருகிறது என 5000 ஆண்டுகளுக்கு முன்பே கண்டிருக்கிறார்கள். அது இன்று வரையிலும் அப்படியே மாறாது வந்து கொண்டிருக்கிறது. அது மட்டுமல்ல, அக்காற்றுகளை தொகைப்படுத்தி, வகைப்படுத்தி, பெயர்ப்படுத்தி, செயல்படுத்தியிருக்கிறார்கள். கிழக்கே இருந்து வரு கின்ற காற்றுக்கு கொண்டல் என்று பெயர். அது மேகத்தின் மூலம் நீரைக் கொண்டு சென்று மழையாகப் பொழிந்து முல்லை நிலத்தை வாழ்விக்கும். மேற்கே இருந்துவருகின்ற காற்றுக்கு கோடை என்று பெயர்.

இது ஆற்றின் மூலம் நீரைக் கொண்டு வந்து மருத நிலத்தை வாழ்விக்கும். தெற்கே இருந்து வருகின்ற காற்றுக்கு தென்றல் என்பது பெயர். இது மக்களை வளர்க்கும். வடக்கே இருந்து வருகின்ற காற்றுக்கு வாடை என்று பெயர். இது பயிர்களை வளர்க்கும் எனத் துருவி ஆராய்ந்து கண்டெடுத்துக் கூறியிருக்கின்றனர்.

காற்றை நான்காகக் கண்டவர்கள்தான் மொழியை மூன்றாகக் கண்டார்கள். இன்று உலகில் உள்ள எந்த மொழியும் மூன்றாகவோ, இரண்டாகவோ இல்லை. எல்லாம் ஒன்றாகவே இருந்து வருகிறது. தமிழ் மொழியை மட்டும் மூன்றாகக் கண்டார்கள். இயல், இசை, நாடகம் என. இது எண்ணம், துணிவு, செயல் எனப் பொருள்படும். மக்கள் எக்காரியத்தையும் முதலில் எண்ணி, பிறகு துணிந்து, அடுத்து செயல்படுத்துவது இயல்பு. இதுவே இயல், இசை, நாடகம் எனப்பெறும். இயற்றமிழ்ப் புலவர்களெல்லாம் இலக்கியங்கள் மூலம் எண்ணத்தை வளர்த்தார்கள். இசைத்தமிழ்ப் புலவர்களெல்லாம் உள்ளத்தை உருக்கித் துணிவு பெறச் செய்தார்கள். நாடகத்தமிழ்ப் புலவர்களெல்லாம் நடத்திக் காட்டி மக்களை நல்வழிப்படுத்தினார்கள். இவையே முத்தமிழாயிற்று. இன்னும் ஒரு விளக்கம்.

ஒரு நாட்டினுடைய உறுப்புகள்தான் மனிதனுடைய உறுப்புகள். நாட்டின் உறுப்பு வேறு. மனிதனின் உறுப்பு வேறு என எண்ண வேண்டாம். நாடே மக்கள், மக்களே நாடு. இந்த ஒற்றுமையைப் பாருங்கள். தலை முடியே காடு. அவற்றில் உள்ள ஈறும், பேனும் விலங்குகள். நெற்றி சம்யம், கண்கள் கல்வி, மூக்கு சுகாதாரம், வாய் பத்திரிக்கைகள், பற்கள் ஆலைகள், கழுத்து பாதுகாப்பு, கைகள் தொழிற்

சாலைகள், கால்கள் போக்கு வரத்து, வயிறு விவசாயம், முதுகெலும்பு வர்த்தகம், நெஞ்சு பண்பாடு, ஒரு தனி மனிதனுடைய பண்பாடுதான் ஒரு நாட்டினுடைய பண்பாடாக அமையும். ஒரு மனிதனுடைய ஒழுக்கம்தான் அவன் வாழும் நாட்டின் ஒழுக்கமாக அமையும்.

ஜப்பான் என்று எடுத்துக் கொண்டால், அந்த நாட்டினுடைய பண்பாடும் ஒழுக்கமும் அந்த நாட்டு மக்களையும் சேர்ந்ததாகவே காணப்படும். இதற்கு மேல் இப்போது நான் ஒன்று கூறுகிறேன். இந்த எண்சாண் உடம்புக்கும் தலையே தலைமை. இதில் கண், காது, வாய் என் மூன்று உறுப்புகள் உள்ளன. இம் மூன்றுக்கும் உரியதே முத்தமிழ், இயற்றமிழ், படிப்பது— வாய்க்கு. இசைத்தமிழ் கேட்பது—காதுக்கு. நாடகத் தமிழ் பார்ப்பது—கண்ணுக்கு, நாம் பெற்ற இந்த மூன்று உறுப்புகளையும் வீணாக்கி விடக் கூடாது என்றே மூன்றுக்கும் மூன்று தமிழை வைத்தார்கள். ஆனால் நாமோ கண்ணிருந்தும் குருடர்களாய், காதிருந்தும் செவிடர்களாய், வாயிருந்தும் ஊமைகளாய் வாழ்ந்து வருகிறோம். இது நான் கூறுவது அல்ல. ''ஊமையராய், குருடர்களாய், செவிடர்களாய் வாழ்கின்றோம் ஒரு சொல் கேளீர் சேமமுற வேண்டுமெனில், தெருவெல்லாம் தமிழ் முழக்கம் செழிக்கச் செய்வீர்'' என்று அழுது அழுது கூறியவர் மகாகவி சுப்ரமணிய பாரதியார். இந்த உறுப்புக்கள் மூன்றையும் பாழாக்கி விடாமல் நன்கு பயன்படுத்தி முத்தமிழையும் வளர்க்க வேண்டுமென இந் நேரத்தில் நான் உங்களுக்கு வற்புறுத்திக் கூறுகிறேன்.

மொழியை மூன்றாகக் கண்டவர்கள் தான், இலக்கணத்தை இரண்டாகக் கண்டார்கள், கண்ணால் காணப்

படுகின்ற பொருள்களுக் கெல்லாம் ஒரு இலக்கணம், 'புறம்', மனத்தால் நினைக்கப்படுகின்ற பொருள்களுக் கெல்லாம் ஒரு இலக்கணம் 'அகம்' என, உலகின் எந்த மொழியிலும், வடமொழியிலும், ஆங்கிலத்திலும்கூட இலக்கணத்தை. இரண்டாகக் காணமுடியவில்லை. இதை எண்ணிப் பெருமை யடைய தமிழுக்கு, தமிழர்க்கு, தமிழகத்துக்கு மட்டுமே உரிமை உண்டு.

இசையை ஏழாக, சுவையை ஆறாக, நிலத்தை ஐந்தாக, காற்றை நான்காக, மொழியை மூன்றாக, இலக்கணத்தை இரண்டாகக் கண்ட தமிழ்ச் சான்றோர் தான் ஒழுக்கத்தை ஒன்றாகவே கண்டு மனிதனோடு சேர்த்து இணைத்து விட்டார்கள். 'திணை' என்றால் ஒழுக்கம். மக்கள் 'உயர் திணை' ஒழுக்கம் உள்ளவர். நாய், பன்றி முதலியன அஃறிணை, ஒழுக்கமற்றவை என்பது பொருள். அதுமட்டு மல்ல உலகில் உள்ள மக்களெல்லாம் ஒரே குலம். அவர்கள் வணங்கும் தெய்வங்களெல்லாம் ஒரே தெய்வம் என 3000 ஆண்டுகளுக்கு முன்பு கண்டு 'ஒன்றே குலம், ஒருவனே தேவன்' எனக் கூறியவர் தமிழ்ச்சான்றோர் திருமூலர்.

## உயர்ந்த கருத்துக்கள்

உலக மொழி அறிஞர்கள் இன்றைக்கும் கண்டு கூறாத சிறந்த கருத்துக்கள் பலவற்றை 2000 ஆண்டுகளுக்கு முன்பே நம் தமிழ் அறிஞர்கள் கண்டு கூறியிருக்கிறார்கள். அவற்றுள் சில;

## அ. புகழ்

மனிதன் முயன்றால் பெறமுடியாதது எதுவுமே இல்லை என்பது மேலை நாட்டினர் கருத்து. இதை மறுத்து 2000 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த ஒரு தமிழ்ப் புலவர் கூறியிருக்கிறார். அது மனிதன் முயுன்றால் பெறமுடியாதது ஒன்று உண்டு. அது புகழ் என்பது. புகழ் தேடிப் பெறுவதல்ல. விலைக்கு வாங்குவது மல்ல. அதிகாரத்தால் வாங்குவது மல்ல. அக்கிரமம் பண்ணிச் சேர்த்து வைப்பதும் அல்ல. புகழ் விரும்புகிறவனை அடையாது. எவ்வளவு முயன்றாலும் பெறமுடியாது என்பது அவரது கருத்து.

அரசியல் தலைவர்களில் சிலர் சென்னையிலிருந்து மதுரைக்குச் செல்லும் பொழுது, தன் தொண்டர்களுக்குப் பணம் அனுப்பி மாலைகளையெல்லாம் வாங்கி வரச்செய்து, வழியிலுள்ள இரயில் நிலையங்களிலெல்லாம் ஜே! போடச் சொல்வதுண்டு. இது புகழ் ஆகுமா? இருந்தாலும் நிலைக்குமா? என்பதை எண்ணிப் பார்ப்பதில்லை. பின் அந்தத் தொண்டர்கள் அத்தலைவரோடு மாறுபட்டு வேறு கட்சிக்குப் போய் அத்தலைவன் எழுதிய கடிதங்களையும் அனுப்பிய பணத்தாள்களையும் வெளியிட்டு அத்தலைவனை அவமானப்படுத்தியதுமுண்டு.

புகழ் விரும்புகிறவனை அடையாது. அதை எவன் வெறுக்கிறானோ அவனை அது வந்தடையும் என்பது அப்புலவர் பெருமகன் கருத்து. அதுமட்டுமல்ல. அதற்கு அவர் ஒரு உவமையும் கூறியிருக்கிறார். அது, ‘புகழ் ஒரு நிழல்’ என்பது, இரண்டுமே மூன்று எழுத்துக்கள். இரண்டிலுமே தமிழுக்கே சிறப்பான ழகரம் அமைந்திருக்கிறது.

காலை 9 மணிக்கு ஒரு மனிதன் வெயிலில் நின்றால் அவன் உயரம், அவன் நிழல் அருகிலிருக்கும், முயன்றால் அதைப் பிடிக்க முடியாது. நடந்தால் அதுவும் நடந்து போய்க் கொண்டே இருக்கும். அதைப் பிடிக்க வேகமாய் ஓடினால் அதுவும் வேகமாய் ஓடிக்கொண்டே இருக்கும். எந்த வகையிலும் அதைப் பிடிக்க முடியாது. நின்றால் அதுவும் நிற்கும். திரும்பி வந்தால் அதுவும் பின் தொடர்ந்து வரும். அதைக் கண்டு பயந்து ஓடினால் அது நம்மைப் பிடிக்க வேகமாக ஓடிவரும். எப்படி இந்தப் புகழும், நிழலும்! இதிலிருந்து புகழ் தன்னை விரும்புகிறவனை அடையாது என்று தெரிகிறது. எவ்வளவு உயர்ந்த கருத்து.

## ஆ. எது இழிவு?

எது இழிவு என்பது ஒரு கேள்வி. ஒவ்வொரு நாட்டினரும் ஒவ்வொரு சமூகத்தினரும் ஒவ்வொன்றை இழிவு எனக் கூறுவதுண்டு. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே வாழ்ந்த புறநானூற்றுப் புலவர் ஒருவர் எது இழிவு? என்ற கேள்விக்குக் கூறும் விடை நம்மை வியப்படையச் செய்கிறது. அது "ஒரு மனிதன், தன்னைப் போன்ற மற்றொரு மனிதனிடம் சென்று கையை நீட்டி, ஐயா ஒரு காசு கொடுங்கள் என்று கேட்பதுதான் இழிவு" என்கிறார். இதைவிட இழிவு ஒன்றும் இல்லையா? என்று கேட்டதற்கு, யோசித்து ஆம் ஒன்று உண்டு, அது "மானங்கெட்டுக் கையை நீட்டி, ஐயா ஒரு காசு என்று கேட்பவனிடம் இல்லை என்று கையை விரிப்பதுதான் அதைவிட இழிவு" என்று கூறியிருக்கிறார்.

## இ. எது உயர்வு?

நம் நாட்டிலும் சரி, வெளி நாட்டிலும் சரி மக்கள் எதை எதையோ உயர்வு என்று கூறிக்கொண்டிருக்கிறார்கள். புறநானூறு என்ற இலக்கியம் கூறுகிறது. "நல்ல வழியிலே பொருளைத் தேடி, சிக்கனமாக வாழ்க்கை நடத்தி, எஞ்சிய பொருளைச் சேமித்து வைத்து, அதையும் அறஞ்செய்ய எண்ணி, தகுதியுடையவர்களைப் பார்த்து "ஐயா! இப் பொருளை ஏற்றுக் கொள்ளுங்கள் என்று கொடுப்பதுதான் உயர்வு" என்கிறது. இதைவிட வேறு உயர்வு இல்லையா? என்று கேட்கும் பொழுது, அப்படிக் கொடுக்கப்படும் பொருளையும் வேண்டாமென்று கூறி ஏற்காமலிருப்பதே அதைவிட உயர்வு என்று கூறுகிறது. எப்படி இக் கருத்து.

ஈயென இரத்தல் இழிந்தன்று—அதனெதிர்
ஈயேன் என்றல் அதனினும் இழிந்தன்று
கொள்ளெனக் கொடுத்தல் உயர்ந்தன்று—அதனெதிர்
கொள்ளேன் என்றல் அதனினும் உயர்ந்தன்று

என்பது புறநானூறு கூறும் கருத்து.

## ஈ. எது உவமை?

முத்தொள்ளாயிரம் என்று ஒரு இலக்கியம் உண்டு. பெயரைப் பார்க்கும் போதே அது 2700 பாடல்களைக் கொண்டது என்று தெரிகிறது, சேரனைப் பற்றி தொள்ளாயிரம், சோழனைப் பற்றித் தொளளாயிரம். பாண்டியனைப் பற்றித் தொள்ளாயிரம், ஆக 2700 பாடல்களைக் கொண்டது.

அழிந்து போன தமிழ் இலக்கியங்களில் அதுவும் ஒன்று. இப்போது 212 பாடல்கள்தான் கிடைத்திருக்கின்றன. அவற்றுள் ஒன்று வறுமையால் ஏற்பட்ட பஞ்சத்தின் உச்ச நிலையை நமக்குக் காட்டுகிறது.

மழை பெய்யாவிட்டால் பயிர் விளையாது, புல் முளையாது. ஆடு மாடுகளுக்குத் தண்ணீர் கிடைக்காது. பூசனை நடக்காது. அரசாட்சியும் அழியும், மக்களும் துன்புறுவார்கள் எனப் பல இலக்கியங்கள் கூறும். இதைவிடக் கடுமையும், கொடுமையுமான ஒரு நிலையை மக்களல்லாத இரண்டு உயிர்களை உவமையாக வைத்து இப்பாடல் காட்டுகிறது.

மழை பெய்யாமையால் கடும் வெயிலால் ஏரி வற்றிப் போய், ஒரே ஒரு தவளைமட்டும் தத்தித் தத்தி உயிர்பிழைக்க மேலேறிக் கரைக்கு வந்து கொண்டு இருந்தது. அடுத்து ஒரு புற்றில் இருந்த பாம்பு வெப்ப மிகுதியால் துடிதுடித்து, தண்ணீர் குடிக்க எண்ணி, ஏரிக்கரைக்கு வந்து, படமெடுத்து ஏரியைப் பார்த்தது. அங்கு நீர் வறண்டு கானல் நெருப்பு தகித்துக் கொண்டிருப்பதைக் கண்டதும் படமெடுத்தபோடு தரையில் சாய்ந்து உயிரை விட்டு விட்டது. குளத்தில் இருந்து, உயிர் பிழைக்க எண்ணித் தத்தித்தத்தி வந்த தவளை வெப்பம் தாங்காமல், செத்துக் கிடக்கும் பாம்புப் படத்தின் நிழலில் நுழைந்து. "அப்பா உயிர் பிழைத்தோம்" என்று மகிழ்ந்ததாம். எப்படி இந்த உவமை! எப்படி இந்த இலக்கியம்! மழை பெய்யாது ஏற்பட்ட பஞ்சத்தின் உச்ச நிலையை இதைவிடச் சிறப்பாக எந்தமொழி இலக்கியமும், எவரும் காட்டியதில்லை.

## உ. சான்றோர் பழிக்கும் வினை

பெற்ற தாயின் வயிறு பசிக்கக் காண்பது பிறந்த மகனுக்கு இழிவு, ஏனெனில் அவன் குடியிருந்த கோயில் அது. அவனைப் பத்து மாதம் சுமந்திருந்த வயிறு அது. ஆகவே எப்பாடு பட்டாகிலும் பெற்ற தாயின் வயிறைப் பசிக்க விடாமல் பாதுகாக்க வேண்டும். ஆனால், அந்த நிலையிலும், திருடியோ, பிறரை ஏமாற்றியோ, சூதாடியோ பொருள் தேடிவந்து தாயின் பசியைப் போக்கக் கூடாது. ஏனெனில் அச்செயலைச் சான்றோர் பழிப்பர் என்று திருக்குறள் கூறுகிறது. எவ்வளவு உயர்ந்த கருத்து,

"ஈன்றாள் பசிகாண் பானாயினும் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை."

## ஊ. பெற்ற தாயும் சான்றோரும்

தன் மகன் என்ன குற்றம் செய்தாலும் பெற்ற தாய் அவனை வெறுக்க மாட்டாளாம். ஒரு சிறு குற்றம் செய் தாலும் சான்றோர்கள் அவனை வெறுத்து விடுவார்களாம். சூதாடத்தான் காசு கேட்கிறான் என்று தெரிந்தாலும்; அவன் விரைவில் திருந்தி விடுவான் என்று எண்ணிக் காசும் கொடுத்து, புத்தியும் கூறி அனுப்புவாளாம் தாய். பல நாள் கொடுப்பாளாம். ஒரு நாள் கையில் இல்லாதபொழுது, 'இல்லை' என்பாளாம். மகன் ஓங்கி அறைவானாம். பல் உதிர்ந்து வாயில் இருந்து இரத்தம் கொட்டுமாம். "அடப் பாவிப் பயலே, ஏண்டா என்னை அடிக்கிறாய்.?" என்னுமாம் அவள் வாய், ஆனால் அவள் உள்ளம், 'தான் பெற்ற மகனுக்கு எவ்வளவு வலுவிருக்கிறது!' என்று எண்ணி

மகிழுமாம். அத்தகைய தாய்கூடத் தன் மகன் குடிக்கிறான் என்று அறிந்தால், ''ஐயோ அறிவிழந்து விடுவானே, குடிப் பெருமை போச்சே'' என்று எண்ணி மனம் புழுங்கித் தன் மகனை வெறுத்து விடுவாளாம். 'என்ன குற்றம் செய்தாலும் பொறுக்கின்ற தாய் முகத்தின் முன்புகூடக் குடி வெறுக்கப் படுமானால், ஒரு சிறு குற்றத்தையும் பொறுக்காத சான்றோர்கள் முகத்தின் முன்னே அவன் என்ன ஆவான்?' என்று கேட்கின்றார் திருவள்ளுவர்! எப்படி இந்தக் கருத்து?.

**ஈன்றாள் முகத்தேயும் இன்னாதால்—மற்றென்னாகும்**
**சான்றோர் முகத்துக் களி.**

என்பது குறள்.

## ஏ. ஒழுக்கம் உயர்வளிக்கும்

மாணவர்களாகிய நீங்கள் நல்லொழுக்கங்களைப் பின் பற்றிச் சிறந்து விளங்க வேண்டும், இன்றேல் உங்களுக்குப் பெருமையிராது.

''ஒழுக்கம் விழுப்பந் தரும்'' என்பது வள்ளுவர் வாக்கு. மரம் கனி தரும். மாடு பால் தரும் என்பது போல, ஒழுக்கம் விழுப்பம் தரும் என்று குறள் கூறுகிறது. விழுப்பம் என்பது சிறப்பு. இதனால், ஒருவன் சிறப்படைய வேண்டுமானால் ஒழுக்கத்தைக் கடைப் பிடித்தாக வேண்டும் என்பது புலப்படும்.

ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை என்பது வள்ளுவர் கருத்து. இது படிப்பால், பட்டத்தால், பதவியால், பணத்தால் ஒருவன் மேன்மை அடைய முடியாது. ஒழுக்கம்

ஒன்றினால்தான் மேன்மையடைய முடியும் என்று கூறி யிருப்பதாகத் தெரிகிறது. ஆம். ஒழுக்கத்தை இழந்தவன் எவ்வளவு படித்தாலும், எத்தகைய பட்டம் பெற்றாலும், எவ்வளவு பெரிய பதவியில் இருந்தாலும், எவ்வளவு பணம் பெற்றிருந்தாலும் என்ன பயன்?

உயிரைக் காப்பாற்றுவதில் நாம் அனைவரும் அதிகக் கவலை எடுத்துக் கொண்டிருக்கிறோம். அதை விட ஒழுக்கத்தைக் காப்பாற்றுவதில் அதிகமாகக் கவலை எடுத்துக் கொள்ள வேண்டும் என்பது வள்ளுவர் கருத்து. இதை அவர்.

''ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்'' என்று அரைக் குறளால் கூறுகிறார்.

ஒழுக்கத்தை இழந்தவன் எவராலும் மதிக்கப் படான். அவன் இகழப்படுபவன். அது மட்டுமல்ல. அவன் 'அடைய வேண்டாத பழியையும் அடைய வேண்டி நேரிட்டுவிடும். என்று வள்ளுவர் எச்சரிக்கை செய்கிறார். இழுக்கத்தின் எய்துவர் பழி என்று கூறவில்லை. 'இழுக்கத்தின் எய்துவர் எய்தாப் பழி' என்பதே அவர் வாக்கு. இதனால், ஒழுக்கம் தவறியவன் தான் செய்யாது, பிறர் செய்த பழியையும் ஏற்க வேண்டி வரும் எனத் தெரிய வருகிறது,

பைபிளில் பத்துக் கட்டளைகள் இருப்பது போலத் திருக்குறளில் பத்துக் கட்டளைகள் இருக்கின்றன. இவை பத்தும் ஒழுக்கத்தைப் பெறத் துணை செய்வன. அவை,

பொய்யைச் சொல்லாதே, புலாலை உண்ணாதே
கள்ளைக் குடியாதே, களவை நினையாதே
காமம் கொள்ளாதே, கொலையைச் செய்யாதே
சூதை விரும்பாதே, சிற்றினம் சேராதே
புறங் கூறாதே, பொறாமை யடையாதே

என்பன. இவை பத்தையும் வெவ்வேறு சொற்களால் கூறியிருப்பது எண்ணி எண்ணி வியக்கக்கூடிய ஒன்று. மாணவர்களாகிய நீங்கள் இவற்றைப் பின்பற்றி நடந்தால் மக்கட் சமூகத்தில் நீங்கள் உயர்ந்து காணப்படுவீர்கள்.

## ஏ. கல்வியின் உயர்வு

கல்வியும் ஒரு செல்வம்; அது உயர்ந்த செல்வம்; "ஈடு இலாச் செல்வம்" என்றவர் திரு. வி. க. "கேடில் விழுச்செல்வம் கல்வி" என்பது வள்ளுவர் வாக்கு. கேடு இல்லாத சிறந்த செல்வம் என்பது இதன் பொருள். பிற செல்வங்கள் கேட்டையும் விளைவிக்கும் என்பது இதன் கருத்து.

பிற செல்வங்கள் நீராலும், நெருப்பாலும் அழிந்துவிடும். ஆனால் கல்விச் செல்வம் வெள்ளத்தால் அழியாது, வெந்தழலால் வேகாது, கொள்ளையிட முடியாது. கொடுத்தாலும் குறையாது, பங்காளிகளால் பங்கிட்டுக் கொள்ளவும் முடியாது.

ஒரு நாட்டின் மன்னனுக்குப் பிற நாடுகளில் அவ்வளவு சிறப்பு இராது. கற்றோருக்குச் சென்ற இடமெல்லாம் சிறப்பு. இதிலிருந்த தெரிவது என்னவெனில் "ஒரு மன்னனிடத்தில் உள்ள செல்வங்கள் அனைத்திலும் கற்றவரிடத்தில் உள்ள கல்விச்செல்வம் ஒன்றே உயர்ந்து காணப்படும்" என்பதுதான்.

பிற செல்வங்கள் அனைத்தும் அழிந்து போய்விடும். கல்விச் செல்வம் ஒன்று மட்டுமே என்றும் அழியாச் செல்வமாகும்.

மற்றச் செல்வங்களைத் தேடிப் பயன் பெற்று மகிழ வேண்டுமானால் ஒருவன் கல்விச் செல்வத்தையும் பெற்றிருக்க வேண்டும். இன்றேல் எச் செல்வத்தைப் பெற்றிருந்தாலும் அவன் அதனால் பயன்பெறான். அது மட்டுமல்ல, அதனால் அவன் துன்பத்தையும் அடைய நேரிட்டுவிடும்.

ஆகவே, மாணவர்களாகிய நீங்கள் கல்விச் செல்வத்தைப் பெற முயன்று பாடுபட வேண்டும்.

## ஐ. கல்லாமையின் இழிவு

செல்வந்தர் முன்னே வறியவன் நிற்பது காணக்கூடிய காட்சியே. ஆனால் கற்றவர் முன்னே கல்லாதான் நிற்பது காணச் சகியாத காட்சியாகும்.

கல்லாத மக்கள் களர் நிலத்தைப் போன்றவர், கல்லாத மக்களாலும் களர் நிலத்தாலும் எவருக்கும் பயனில்லை,

விதைக்காதபோது விளைவும், சமைக்காதபோது உணவும், உழைக்காதபோது பயனும் இல்லாததுபோல கல்லாத போது சிறப்பும் இல்லை.

பல துறையில் பல நூல்களைப் படிப்பதைவிட ஒரு துறையில் சில நூல்களைப் படிப்பது நல்லது. ஆம். அகலமாக உழுவதிலும், ஆழமாக உழுவதே நலமாகும்.

கல்வி வேறு, அறிவு வேறு என்பதை ஒப்புகிற ஒவ்வொருவரும் கற்றவனுடைய அறிவு வேறு என்பதையும் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். கற்றவரும் கல்லாதவரும் மக்களேயன்றி கற்களேயாயினும் முன்னது வைரக்கல்,பின்னது கருங்கல் என்றாகிவிடும்.

"என் மகன் படிக்கவில்லை. எனக்கு இரண்டு எருமைகள் உள்ளன. அவற்றை மேய்த்துக் கொண்டிருக்கிறான்" என்றான் ஒருவன். அதைக் கேட்ட புலவர் பெருமகன் கவிராச செகவீர பாண்டியனார் கூறியது என்ன தெரியுமா? 'இனி எனக்கு இரண்டு எருமைகள் உள்ளன என்று எவரிடமும் கூறாதே. மூன்று எருமைகள் உள்ளன என்றே கூறு' என்பதே. பாவம்! கல்லாத மக்கள் பொல்லாத விலங்குகள் என்பது அப்புலவர் பெருமகன் கருத்துப் போலும்.

கல்விச் செல்வம் இளமையில் பெறவேண்டிய ஒன்று. பெறாதவர்கள் முதுமையில் வருந்த வேண்டி வரும். இளமையில் கல்வி பயிலாத ஒரு மாணவன் முதுமையில் கதறி அழுது தன் தந்தையை வைது கூறியிருக்கிறான். அப்பாடல் இது.

**அள்ளிக் கொடுக்கின்ற செம்பொன்னும் ஆடையும் ஆதரவாய்க்**
**கொள்ளிக்கும் பட்ட கடனுக்கும் என்னைக் குறித்த தல்லால்**
**துள்ளித் திரிகின்ற காலத்திலே என்றன் துடுக்கடக்கிப்**
**பள்ளிக்கு வைத்திலனே என் தந்தையாகிய பெரும் பாதகனே.**

எப்படி, இப்பாடல்! மாணவர்களாகிய நீங்கள், இப்பாடலைப் பலமுறை திரும்பத் திரும்பப் படிப்பது நலமாகும்.

## ஒ. திருத்தமாக எழுது

மாணவர்களாகிய நீங்கள் இப்பொழுதிலிருந்தே எழுத்துக்களை கால் வாங்கித் திருத்தமாக எழுத வேண்டும். தவறினால் உங்கள் எழுத்துக்கள் பிறரால் படிக்க முடியாமல் போய்விடும்.

உலகிலேயே அழகாகவும், திருந்தமாகவும் எழுதுவதில் பிரெஞ்சு நாடு முன்னணியில் நிற்கிறது. ஆங்கு பள்ளிகளில் உள்ள ஆசிரியர்கள் மாணாக்கர்களின் கையெழுத்துக்களில் அதிகக் கருத்தைச் செலுத்துகிறார்கள். ஆங்கில ஆசிரியர்கள் அவ்வாறு மாணவர்களின் எழுத்துக்களில் கருத்தைச் செலுத்துவதில்லை. இதனால் சிலருடைய ஆங்கில எழுத்துக் கள் எழுதியவர்களாலேயே பின்னால் படிக்க முடியாமல் போய்விடுகிறது. இது தவறு.

என் தந்தையார் என்னுடைய தொடக்க கால எழுத்துக் களைச் சரியாகத் திருத்துவதில் அதிக நேரம் எடுத்துக் கொள்வார்கள். அது மட்டுமல்ல, அவர் ஒரு பாடலை அடிக்கடி கூறி என்னை எச்சரிப்பதும் உண்டு. அப்பாடல் :

**கொம்பு சுழி கோணாமல் கொண்ட கோல் சாயாமல்**
**அம்புபோல் கால்கள் அசையாமல்—தம்பி நீ**
**எழுதினால் வாழ்வுண்டு புகழுமுண்டு,**
**இன்றேல் உனக்கு எதுவுமில்லை.**

என்பது. இப்பாடலை நீங்கள் திரும்பத் திரும்பப் படிக்க வேண்டும் என்பது என் விருப்பம்.

## ஒ. எழுத்தாளனாக

தம்பி! நீ முயன்றால் எழுத்தாளனாகவும் ஆகலாம் கல்லெல்லாம் மாணிக்கக் கல்லல்ல என்பதையும், மின்னுவ தெல்லாம் பொன்னல்ல என்பதையும் நீ அறிந்திருக்கலாம். அதுபோல எழுதுவதெல்லாம் எழுத்தல்ல என்பதையும் நீ அறிந்திருக்க வேண்டும்,

எழுதுகிறவனெல்லாம் எழுத்தாளன் அல்ல. அவன் எழுத்தன். அவ்வளவுதான். எழுத்தை ஆள்பவன் தான் எழுத்தாளன்.

உயர்ந்த உள்ளத்தைப் பெற்று நிறைந்த கருத்துக்களைத் தேடி, சிறந்த சொற்களைக் கொண்டு, குறைந்த எழுத்துக் களால் எழுதப்படுவதே எழுத்து என்றாகும். அவ்வாறு எழுதபவனே எழுத்தாளன்.

நெற்களைத் தேய்த்து உமியை ஊதிவிட்டால் அரிசிகள் காணப்பட வேண்டும். எழுத்துக்களைப் படித்து நீக்கி விட்டால், கருத்துக்கள் காணப்பட வேண்டும். இன்றேல் நெற்பதரைப்போல அதுவும் ஒரு பதராகிப் போய்விடும்.

எழுத்துக்கு ஒரு ஆற்றல் உண்டு. அதுவும் பேராற்றல். மன்னனின் செங்கோலைவிட மக்களின் எழுதுகோலுக்கு அதிக ஆற்றல் உண்டு.

வில்லும் வேலும் கண்ணாற் கண்டவரின் உடலில் மட்டுமே பாயும். ஆனால் எழுத்து கண்ணாற் காண முடியாதவர் உள்ளத்திலும் பாய்ந்துவிடும்.

நெறி என்பது நன்னெறியையே குறிக்கும். நெறியில் நன்னெறி, தீ நெறி என இரண்டில்லை. தீநெறியைக் குறிப்பிட நேர்ந்தால் அதைத் தீநெறி என்றெழுதாமல், நெறியல்லா நெறி என்று எழுதுவதே மரபு. அது எழுத்து. அவன் எழுத்தாளன்.

எழுத்துக்களைக் குறைத்து, கருத்துக்களை நிறைத்து, எழுதுவது நல்லது. பல பக்கங்களில் ஒரு கருத்துக் காணப் படுவதைவிட ஒரு பக்கத்தில் பல கருத்துக்கள் காணப்படுவதே எழுத்தாகும்.

பேசுவது போல எழுதுவது தவறு. அவ்வாறுதான் எழுதவேண்டும் என்பது ஒரு தவறான 'கருத்து. தமிழகத்தில் ஒவ்வொரு மாவட்டத்திலும் உள்ளவர்கள் ஒவ்வொரு வகை யாகப் பேசுகிறார்கள். அதிலும் ஒவ்வொரு பிரிவினரும் வெவ்வேறு வகையாகப் பேசி வருகின்றனர். 'இவர்களில் யார் பேசுவது போல?' எனக் கேட்டால், விடையே வராது. பேச்சுக்கலை வேறு; எழுத்துக்கலை வேறு. இரண்டும் ஒன்றாக வேண்டும் என விரும்புகிறவர்கள் பேசுவதைப்போல எழுதுங்கள் எனக் கூறாமல் எழுதுவதைப்போல பேசுங்கள் எனக் கூறுவது நலமாகும்.

பேசுவதுபோல எழுதுகிறவன், எழுத்தாளி ஆகான்.
பிழைபட எழுதுகிறவன், படிப்பாளி ஆகான்.
வைது எழுதுகிறவன், அறிவாளி ஆகான்.

வாழ்த்தி எழுதி வாழ்பவன், வாழத் தெரியாதவன்.

காதற் கதைகளை எழுதுபவன், காலத்தின் அருமையை அறியாதவன்,

காமக் கதைகளை எழுதுபவன் தீயொழுக்கத்தை வளர்ப்பவன்.

பலமொழிச் சொற்களை கலந்து, எழுதுபவன், ஒரு மொழியிலும் பற்று இல்லாதவன்.

பெருந்தன்மையோடு பழகியறியாதவன், 'பேனா'வோடு பழகத்தகாதவன்.

இவையனைத்தையும் ஏற்கமுடியாத எழுத்தாளன் இறுதிக் கருத்தையாவது ஏற்றுக்கொண்டாக வேண்டும். இன்றேல் அவன் ஒரு சிறந்த எழுத்தாளனாக உயர முடியாது.

நீ எழுதும் கட்டுரையின் தலைப்பை முதலில் விளக்கி, பிறகு எடுப்பு, தொடுப்பு, முடிப்பு. என ஒரு ஒழுங்கு முறைப் படுத்தி எழுதுதல் வேண்டும். இடையிடையே மேற்கோளும் காட்டுவது நல்லது. தேவையான இடங்களில் சிறிது நகைச் சுவையும் புகுத்தி எழுதலாம்!

எழுதும் கட்டுரைகள் யாவும் ஒரு குறிக்கோளை உடைய தாக இருக்க வேண்டும். தமிழ் இலக்கியங்கள் அனைத்தும் ஒவ்வொரு குறிக்கோளை உடையவை. குறிக்கோள் இல்லாத வாழ்வும், குறிக்கோள் இல்லாத எழுத்தும் பயனற்றவை.

'எங்குச் செல்கிறோம்' என்று எண்ணாமலேயே சாலையில் நடந்து கொண்டிருப்பவனும், 'எதை எழுது கிறோம்' என்று எண்ணாமலேயே எழுதிக் கொண்டிருப் பவனும் ஒரே படகில் செல்ல வேண்டியவர்கள்.

மகாராஜ ராஜ ஸ்திரி, விவாக சுப முகூர்த்தப் பத்திரிகை, வதூவரர்கள் என்பவைகளெல்லாம் மறைந்து, திருவாளர், திருமண அழைப்பு, மணமக்கள் என்பனவெல்லாம் வெளிவந்த பிறகும், அக்கிராசனாதிபதி, பிரசங்கி, வந்தனோபசாரம் என்பவைகளெல்லாம் ஒழிந்து, தலைவர், சொற்பொழி வாளர், நன்றிகூறல் ஆகியவை வழக்கத்திற்கு வந்துவிட்ட இக்காலத்திலும்கூடப் 'பறவை' இருக்கப் 'பக்ஷி'யையும், 'பூ' இருக்கப் புஷ்பத்தையும் தேடிப்பிடித்து எழுதுவது எதன் பொருட்டோ?

"மன்னன் தன் தோள்களில் மலர் மாலைகளையணிந்து பல்லக்கு ஏறி ஊர்வலம் வந்தான்" என்பதை ஒருவர் "ராஜன் தன் புஜங்களில் புஷ்பகாரங்களைக் குடிக்கொண்டு ரதம் ஏறிப் பவனி வந்தான்" என எழுதியிருந்தார். ஒரு திருமணப்பத்திரிக்கையில், "தாங்கள் உற்றார், உறவினருடன்

வந்திருந்து மணமக்களை வாழ்த்தியருள வேண்டுகிறேன்'' என்பதை, ஒருவர், ''தாங்கள் இஷ்ட மித்ர பந்து ஜன சமேதராக விஜயம் செய்து வதூவரர்களை ஆசீர்வதிக்க பிரார்த்திக்கிறேன்'' என்று எழுதியிருந்தார். இவற்றுள் எது தமிழ்?

''சோறு, தண்ணீர் என்பதை கானா, பானி என்றோ, ரைஸ், வாட்டர் என்றோ, போஜனம், தீர்த்தம்'' என்றோ பிறர் எழுதலாம். ஆனால் அதைத் தமிழன் எழுதலாமா? எழுதினாலும் அதை 'தமிழ்' எனலாமா? என்பவைகளைப் பிறர் எண்ணிப் பார்க்காவிட்டாலும், எழுத்தாளன் எண்ணிப் பார்க்க வேண்டும்.

''பழமொழிச் சொற்களைக் கலந்து எழுத்தினால்தான் ஒரு மொழிவளரும்'' என்பது, ''கல்லையும் மணலையும் கலந்தால்தான் அரிசி கூடும்'' என்பதைப் போன்றது. அரிசியும், சீரகமும் உணவுப் பொருட்களே. எனினும் அவை தனித்தனியே இருக்கும்போதுதான் அரிசிக்கும் மதிப்பு, சீரகத்துக்கும் சிறப்பு. இரண்டும் கலந்துவிடுமானால் இரண்டுமே பாழாகிவிடும்.

''அட்ஹாக் கமிட்டி, லோக்சபா, ஆகாசவாணி, விவித்பாரதி'' ஆகியவைகளெல்லாம் புரியும் போது, தமிழ்ச் சொற்கள் தமிழனுக்குப் புரியாது எனக் கூறுவது தமிழுக்கும், தமிழனுக்கும் மானக்கேடாகும். யாராவது ஒருவர் தமிழ்ச் சொல் தனக்குப் புரியவில்லை என்றால் அவர் தமிழ் படிக்க வில்லை என்று பொருள். தமிழ்ச்சொற்கள் அவருக்குப் புரிய வேண்டுமானால் அதற்குரிய ஒரே வழி அவர் தமிழைப் படிக்கவேண்டும் என்பதுதான். அதை விட்டுவிட்டு தமிழ் படிக்காத' மக்களுக்குப் புரியும்படி எழுதுகிறேன் என

எழுதுவது ஒரு புதிய கதம்ப மொழியை உருவாக்க உதவுமே யன்றி தமிழை வளர்க்க உதவாது.

நல்ல தமிழில் எழுதினாலும் அதையும் வளரவிடாமல் அழித்து ஒழிக்கும் நச்சுப் பூச்சிகள் இரண்டு இருக்கின்றன. அவை இலக்கணப் பிழையும், அச்சுப் பிழையும் ஆகும். வளரும் பயிராக இருக்கும் எழுத்தாளர்கள் இப்பூச்சிகளால் தாக்கப்படாமல் இருப்பது நலமாகும்.

மக்களைத் திருத்த எழுத்துத் துறையே தலை சிறந்தது. இதையறிந்தே அறிஞர் வால்டேர், "வாள் முனையைவிடப் பேனா முனையே அதிக வலிமையுடையது" என்றார். எனினும் ஒழுக்கமற்றவனுடைய வாளோ. பேனாவோ வெற்றி பெறாது. வெற்றி பெற்றாலும் அது நிலைத்து நில்லாது. ஆகவே, "ஒழுக்கமுள்ளவனுடைய எழுத்துக்கு ஒரு தனி எடை யுண்டு" என்பதை எழுத்தாளர்கள் முதலில் ஒப்புக்கொள்ள வேண்டும். அடுத்து தங்களைத் திருத்திக்கொள்ள வேண்டும். அதன் பிறகே பிறரைத் திருத்த முனைய வேண்டும். தன்னையே திருத்திக் கொள்ள முடியாத ஒருவனால் நாட்டையோ, மக்களையோ, சமூகத்தையோ திருத்திவிட முடியாது.

"ஆமை" புகுந்த வீடும் அமீனா புகுந்த வீடும் பாழாகி விடும்" என்பது நம் நாட்டுப் பழமொழி. அமீனா புகுந்த வீட்டைப் பார்த்திருக்கிறோம். ஆனால் ஆமை, பாம்பைப் போல நச்சுத்தன்மை கொண்ட ஒரு உயிரினம் அல்ல. இது புகுந்த வீடு எப்படி பாழாகிவிடும் என்பது ஒரு கேள்வி, ஆமை என்றதும் பலர் கிணற்றாமையை எண்ணுகிறார்கள். இது கிணற்றாமையும் அல்ல, குளத்தாமையுமல்ல. ஆற்றாமையாகும். எந்த ஆறு? அது விண்ணாறுமல்ல,

வெட்டாறுமல்ல, அழுக்காறு. மற்ற ஆற்றின் இரு கரைகளிலும் கோட்டுப்பூவும், கொடிப்பூவும் பூக்கும். இந்த ஆற்றின் கரைகளில் 'எரிப்பு' ஒன்று மட்டுமே பூக்கும். ஆற்றாமை, அழுக்காறு, எரிப்பு என்பன 'பொறாமை' என்பதையே குறிக்கும். இது புகுந்தால் வீடும், நாடும் மட்டுமல்ல, எழுத்தும் பாழாகிவிடும். ஆகவே எழுத்தாளன் தன்னுள்ளத்இல் இந்த ஆமை புகுந்துவிட இடங்கொடாமல் எச்சரிக்கையாயிருப்பது நல்லது.

சில எழுத்தாளர்கள் வேண்டியவர்களைப் புகழ்ந்தும், உயர்த்தியும், வேண்டாதவர்களை இகழ்ந்தும் தாழ்த்தியும் எழுதி வழிகிறார்கள். இவர்கள், எழுத்துலகிற்குத் தேவையில்லாதவர்கள். உண்மையை ஒழிக்காமல், மறைக்காமல், தீமையற்ற சொற்களால் அச்சமற்று எழுதும் எழுத்தாளர்களே அனைவராலும் வரவேற்கப்படுவர்.

''இன்ன நூலைப் படித்து நட'' எனக் கூறுவதற்குத் தகுந்த நூல்கள் பல இப்போது தோன்றி வருகின்றன. இது பெரிதும் பாராட்டத்தக்கது. ஆனால் இது போதாது. ''இன்ன ஆசிரியரைப் பார்த்து நட'' எனக் கூறுவதற்குத் தகுதியுடைய நூல் ஆசிரியர்கள் பலர் இப்போது தோன்றியாக வேண்டும். இன்றேல் எழுத்துலகம் வாழாது.

நாளிதழ்களுக்கு ஒரு நாளே உயிர். மறுநாள் பிறந்தால் அது இறந்துவிடும். கிழமை இதழ்களுக்கு ஒரு கிழமையும், திங்களிதழ்களுக்கு ஒரு திங்களும் உயிர் உண்டு. ஆண்டு மலருக்கு அடுத்த மலர் பிறக்கும் வரை உயிர் இருக்கும். பிறகு இறந்து விடும். ஒரு நல்ல இலக்கியப் படைப்பு என்றால் அது குறைந்தது அடுத்த

தலைமுறை வரையிலாவது உயிர் பெற்றிருக்க வேண்டும். இன்றேல், அது உயிர் இலக்கியம் ஆகாது.

தமிழ்ச் சான்றோர்களால் எழுதப்பெற்ற சிற்றிலக்கியங்களும் பேரிலக்கியங்களும் பல நூற்றாண்டுகளாகி இன்னும் நிலைத்திருப்பதையும், திருவள்ளுவர் செய்த திருக்குறள் இரண்டாயிரம் ஆண்டுகளாக, அதாவது நூறு தலைமுறைகளாகி இன்றும் நிலைத்திருப்பதையும், இன்றைய எழுத்தாளர்கள் தங்கள் கருத்தில் கொள்வது நலமாகும்.

அவை இன்றும் நின்று நிலைத்திருப்பது எதன் பொருட்டால் எனில், அவை மக்களின் நல்வாழ்வுக்கு ஏற்ற நல்ல வழிகளை அமைத்துக் காட்டிக் கொண்டிருப்பதே எனத் துணிந்து கூறலாம்.

ஆகவே, இன்றைய எழுத்தாளர்கள் நமக்குமுன்னே வாழ்ந்த சான்றோர்களின் வழிமுறைகளைப் பின்பற்றியும், தமிழ்ப்பண்பாடு, தமிழர் பண்பாடு, தமிழகத்துப் பண்பாடு முதலியவைகளைப் பின்பற்றியும் எழுத வேண்டும்.

காமக்கதைகளையும். ஆபாசக்கதைகளையும் எழுதி வருகிற திங்களிதழ்களை வெறுக்கவும், ஒழுக்கக் கேடுகளை வளர்க்கும் திரைப்படங்களை வெறுக்கவும். மாணவர்கள் கற்றுக்கொள்ள வேண்டும். வெறுப்பதோடு நின்று விடாமல் அவைகளைத் திருத்தவும் முயற்சிப்பது நலமாகும்.

நல்லதை எண்ணி, நல்லதைப் படித்து. நல்லதைக் கேட்டு, நல்லவைகளை எழுதி மக்களுக்கு நல்வழி காட்டும் நல்ல எழுத்தாளர்கள் நமது நாட்டில் பெருகியாக வேண்டும். அவற்றில் நீயும் ஒருவனாகக் காட்சியளிக்க வேண்டும் என்பது என் விருப்பம்.

நீ படித்த வரலாற்றுப் பாடத்தில் ஒன்றை நினைவு கூர்ந்து முதல் கட்டுரையாக எழுதலாம். பிறகு அப்பாடத்தை உன் கட்டுரையோடு ஒப்பு நோக்குதல் வேண்டும். மாறு பட்டிருப்பவைகளைத் திருத்திக்கொள்ள வேண்டும். பின்பு மற்றொருநாள் வேறு ஒரு பாடத்தில் படித்தவைகளை நினைவு கூர்ந்து எழுதுதலும், பிறகு ஒப்பு நோக்குதலும், திருத்திக் கொள்ளுதலும் நலமாகும்.

அடுத்து, எங்கேனும் நடந்த ஒரு நிகழ்ச்சியை அல்லது சொற்பொழிவைக் கட்டுரை வடிவில் எழுதிப் பார்த்து மகிழலாம்.

அதன் பிறகு, நாடு, மொழி, தொழில், வணிகம், சமூகம், சீர்திருத்தம், அறிவியல், முதலியன பற்றி நன்கு சிந்தித்துக் கட்டுரைகளை எழுதுவது நல்லது. அவற்றையும், பிற சிறுகதைகளையும், நகைச்சுவை கலந்து எழுதி நாளிதழ் களுக்கும், திங்களிதழ்களுக்கும் அனுப்ப வேண்டும். அடுத்து அந்த இதழ்கள் உன் கட்டுரைகளை வெளியிட்டு உன்னை ஒரு சிறந்த எழுத்தாளனாக ஊக்குவிக்கும்.

ஆகவே, தம்பி! நீ எழுது. நன்றாக எழுது. நல்லதையே எழுது. நல்ல எண்ணங்கொண்டு எழுது. வாழ்த்தா, வசையா என்று பாராதே. வெற்றியா, தோல்வியா என்று எண்ணாதே. நீ எழுதிக் கொண்டேயிரு. ஆனால் நீ எழுதத் தொடங்கும் முன்னே உன் உள்ளத்தை உயர்த்திக் கொள். உன் உள்ளம் உயர உயர நீ உயர்வாய்.

நேர்மையான குறிக்கோளை முன்வைத்து, தூய உள்ளத் தோடு எழுதுபவன், வெற்றியை எதிர்பார்த்துக் காத்திருக்க வேண்டியதில்லை. அது அவன் காலடியில் தானே வந்து விழும்.

## ஔ. பேச்சாளனாக...!

தம்பி! நீ விரும்பினால் ஒரு பேச்சாளனாகவும் ஆகலாம். அதற்கு முதல் தேவை கணீரென்ற குரல் அமைப்பு. இன்று தமிழகத்தில் சிறந்த பேச்சாளர்களாகக் காணப்படுகிற அனைவரும், கணீரென்ற குரலைப் பெற்றிருப்பதையே காணலாம்.

அடுத்து வேண்டியது உணர்ச்சி. நாட்டில் நிகழ்பவைகளை, அரசு நடத்துபவைகளை, சமூகத்தில் நடப்பவைகளைக் கண்டு அறிந்து, எது நல்லது, எது கெட்டது என்ற முடிவுக்கு வர வேண்டும். பின்பு அந்த முடிவில் அழுத்தமாக நம்பிக்கை வைத்து உணர்ச்சியோடு பேச முயல வேண்டும்.

முதல் பேச்சு, ஒரே ஒரு செய்தியை மட்டும் இரண்டு மணித்துளி அளவில் பேசி முடித்து விட வேண்டும். இரண்டாவது பேச்சு இரண்டு செய்திகளை மட்டும் ஐந்து மணித்துளிகளில் பேசி முடித்து விட வேண்டும். மூன்றாவது பேச்சு. மூன்றே மூன்று, செய்திகளை மட்டும் பத்து மணித் துளிகளில் பேசி முடித்து விட வேண்டும். பிறகு நாள் ஆக ஆக, சில செய்திகளை மனதில் நினைத்துக் கொண்டு, அவற்றைக் கோர்வையாக பதினைந்து மணித்துளிகளுக்குள் பேசி முடித்து விட வேண்டும். நீ பேசுகிற பேச்சைக் கேட்டவர்கள் இன்னும் கொஞ்சம், பேச மாட்டாரா? என்று நினைக்கிற அளவுக்கு இருத்தல் வேண்டும்.

பேச்சுக்களில் எடுப்பு, தொடுப்பு, முடிப்பு என்ற அமைப்பிலும், இடையிடையே மேற்கோள்களை அமைத்தும் பேசலாம்.

தகுந்த இடத்தில் நகைச்சுவைகளை உயர்ந்த முறைகளில் அமைத்துப் பேசுவது நல்லது. நகைச்சுவைகளில் ஒரு மயிரிழை தவறினாலும், அது நையாண்டியாகக் காட்சியளித்து விடும். நகைச்சுவையும், நையாண்டியும் வெவ்வேறு. நகைச்சுவை அறிவாளிகளை மகிழ்விக்கும். நையாண்டி மற்றவர்களை மகிழ்விக்கும். நீ பேசியது நகைச்சுவையா? நையாண்டியா? என்பதை அதைக் கேட்டு மகிழ்ந்தவர்களைக் கொண்டே நன்கறியலாம்.

பேச்சுக்களில் சொற்கள் சுருக்கமாவும், கருத்துக்கள் அதிகமாகவும் இருத்தல் வேண்டும். இன்றேன் அது நெற்பதரைப் போல சொற்பதராகக் காட்சியளித்து விடும்.

சிலம்பு விளையாட்டு என்று ஒன்று உண்டு. அதில் குச்சி அதிவேகமாகச் சுழலும். ஆனால் எதிரியின் மேல் படாது. அக்குச்சிச் சிலம்பைப்போல சொற்சிலம்பை விளையாடுகிறவர்களும் உண்டு. அது. கேட்பவர்கள் மனதில் பதியாது,

ஒரு நல்ல பேச்சு என்பது கேட்டவர் மனதில் பசுமரத் தாணி போல பதிந்து தங்கியிருக்க வேண்டும். இன்றேல் அதை ஒரு சிறந்த பேச்செனக் கூற முடியாது.

அடுக்குச் சொற்களும், அலங்கராச் சொற்களும் பேச்சுக்குத் தேவைதான். ஆனால் அது அளவோடு இருக்க வேண்டும். அவற்றை அளவுக்கு மீறிப் பயன்படுத்தினால் கேட்பவர் உள்ளத்தில் ஒரு வெறுப்பை உண்டாக்கிவிடும்.

முதல் முதலாக மேடையேறிப் பேசும் பொழுது சிலருக்கு தொடை நடுக்கம் வந்து விடும். அப்போது. அவர்கள் தான்

ஒரு பெரிய அறிவாளி என்றும், கூட்டத்திற்கு வந்திருப்பவர்கள் தன்னைவிட குறைந்தவர்கள் என்றும் நினைத்துக் கொண்டு மேடை ஏறவேண்டும். பேச்சு முடிந்ததும் அந்த எண்ணத்தை மேடையிலேயே விட்டுவிட்டு இறங்கிவிட வேண்டும். இன்றேல் அது அவனை வீழ்த்திவிடும்.

சொற்பொழிவு என்பது உயர்ந்த சொற்களைத் தேடிப் பிடித்து, ஒன்றன்பின் ஒன்றாக முறைப் படுத்தி அமைத்து, உரத்த குரலில் கூட்டத்தில் கடைசியில் உள்ள மக்களைப் பார்த்தும், சில சமயங்களில் இடது புறமும், வலது புறமும் பார்த்தும், ஒரு வரம்புக்கு உட்பட்டு பிழையின்றிப் பேசுவதே ஆகும்.

மழை பொழிதல் என்பதும் அப்படித்தான். மழை நீர் நேராக, வரிசையாக, ஒன்றன் பின் ஒன்றாக, துளித் துளியாக, அமைதியாகச் சொட்டுவதையே குறிக்கும். இன்றேல் அது பொழிதல் என்றாகாமல் சாரல், தூரல், சொட்டல், கொட்டல், வெப்பம், புயல் என்றாகி விடும்.

அம்மி பொழிதல் என்பதும் அப்படியே. அம்மியைப் பொழிகிறவர்கள் ஒரு தாமரை மலர் ஓவியத்தை முதலில் தன் உள்ளத்தில் அமைத்துக் கொண்டு, பிறகு அம்மியில் நான்கு புறமும் எல்லையை அமைத்துக் கொண்டு, அதன்பிறகு வரன்முறையாக அமைதியாக ஒன்றன்பின் ஒன்றாகப் பொழிந்து அழகுபடுத்துவதே ஆகும். இன்றேல் அது அம்மி பொழிதல் என்றாகாமல் கீரல். கொத்தல், கிளறல். குழறல், பெயர்த்தல், உடைத்தல் என்றாகி விடும்.

இவை போலவே சொற்பொழிவு என்பதும் முறை தவறினால் கிண்டல், கிளறல், உளறல், கூச்சல், குத்தல்,

வைதல் என்றாகி விடும். ஆகவே இம்முறைகளை பேச்சாளராக விரும்புகிறவர்கள் நன்கு அறிந்து, கடைப்பிடித்துப் பேசுவதே நலமாகும்.

மேடையேறிப் பேசும் பொழுது. தன் கருத்துக்களை கொள்கைகளை நன்கு விளக்கிப் பேசவேண்டும். மாறுபட்ட கருத்துக்களை எவரும் கூறியிருந்தால், அவற்றில் உள்ள தவறுகளையும் காரணங்காட்டி மறுக்கலாம். மாறுபட்ட கருத்தைக் கூறியவர்களின் பெயர்களைக் குறிப்பிடுவதோ, அவர்களைத் தாக்கிப் பேசுவதோ கூடாது. மாறுபட்ட கருத்தைக் கூறியவர்களை மதிக்கக் கற்றுக்கொள்ள வேண்டும். அவர்களை வைது பேசுவது தவறு. வைகிறவன் வையப் படுவான். எவன் முன்னேறினாலும், வைகிறவன் முன்னேற முடியாது.

நாட்டை, மொழியை, மக்களை, சமூகத்தைச் சீர்திருத்த எண்ணுகிறவர்கள் முதலில் தங்களைச் சீர்திருத்திக் கொள்ள வேண்டும். என்பது எழுத்தாளனுக்கு மட்டுமல்ல பேச்சாளனுக்கும் தேவை.

அமெரிக்காவில் ஒரு கோடீஸ்வரன். எவ்வளவு சொத்துக்கள் இருக்கின்றன என்பது அவனுக்கே தெரியாது. கடந்த உலக மகாயுத்தத்தில் அவனது மகன் இறந்து போனான். அதைக் கேட்டதும் அவன் உடன் பிறந்த சகோதரியும் நோய்வாய்ப்பட்டு இறந்தாள். மகனும், மகளும் இறந்த ஓராண்டுக்குள்ளாகவே அவனது மனைவியும் இறந்து போனாள். அக் கோடீஸ்வரன் தனி மனிதன் ஆனான். உறவினர் எவரும் இல்லை. தன் சொத்துக்களை என்ன செய்வதென்றே அவனுக்குத் தெரியவில்லை. நண்பர்கள் பலரிடம் ஆலோசனை கேட்டான். கல்லூரிகளைக்

கட்டுங்கள் மருத்துவ மனைகளைக் கட்டுங்கள். சர்ச்சுகளைக் கட்டுங்கள். என்றெல்லாம் ஆலோசனை வந்தது. அதை அவன் ஏற்கவில்லை. அமெரிக்காவில் என்ன இல்லை என்று யோசித்தான். சமூகசேவை (Social Work) இல்லை என்பதை உணர்ந்தான். அதற்காகத் தன் சொத்துக்கள் அனைத்தையும் எழுதி வைக்கத் துணிந்தான். சமூக சேவை பற்றிப் பிரச்சாரம் செய்ய பேராசிரியர்கள் பலர் தேவை என்றும். சம்பளம் அதிகமாகக் கொடுக்கப்படும் என்றும் விளம்பரம் செய்தான். அதிக சம்பளத்தைப் பார்த்ததும். 800க்கும் மேற்பட்ட பேரா சிரியர்கள் அவ்வேலைக்கு விண்ணப்பம் செய்தார்கள். அத்தனை பேரையும் திறந்த வெளியில் நேர்முகத் தேர்வுக்கு அழைத்தான். எல்லோரும் வந்து கூடினார்கள். அவர்களை அழைத்த அக்கோடீஸ்வரன் மேடைமீது ஏறி, ''நான் ஒரு மூடன், அமெரிக்காவில் சமூகத் தொண்டே இல்லை என்றும். அது நம் நாட்டுக்குத் தேவை என்றும். நினைத்துத்தான் பத்திரிக்கைகளில் விளம்பரம் செய்தேன். இப்போது பார்த்தால் அது நம் நாட்டில் நிறைய இருக்கிறது என்று தெரிகிறது. சமூகத் தொண்டைப் பற்றி நன்கு அறிந்து உணர்ந்தவர்களும், பிறருக்கு உரைக்கும் ஆற்றல் பெற்றவர் களுமாகிய பேராசிரியர்கள் 800க்கு மேற்பட்டவர்கள் இந் நாட்டில் இருப்பதை நான் அறியாமல் போனேன். இப்போது சமூகத் தொண்டு பற்றி அறிந்துள்ள இத்தனை பேராசிரியர் கள் இருப்பதால், இந்நாடு அழிந்து போய்விடாது என்று தெரிகிறது. தயவுசெய்து நீங்கள், ஊரில் எங்கும் பிரச்சாரம் செய்யப் போக வேண்டாம். உங்களை நீங்களே சீர்திருத்திக் கொள்ளுங்கள். அமெரிக்கா முன்னேறி விடும்'' எனக் கூறி இறங்கிப் போய்விட்டான்.

இந்நிகழ்ச்சி 1916-ல் ஏற்பட்டது. மேடையேறிப் பேசும் பேச்சாளருக்கு இது ஒரு படிப்பினையாக இருக்குமென நம்புகிறேன்.

இன்னும் ஒன்று. நபிகள் நாயகம் ஒரு கூட்டத்தில் பேசிக் கொண்டிருந்தார். ஒரு கிழவி தன் பேரனைக் கூட்டிக் கொண்டு போய், "இவன் சர்க்கரை அதிகமாக சாப்பிடுகிறான். சாப்பிட வேண்டாம் என்று இவனுக்குப் புத்தி சொல்லுங்கள்" எனறு கேட்டுக் கொண்டாள். உடனே நாயகம் அவர்கள் அக்கிழவியை, "மூன்று நாட்கள் கழித்து வா" என்று சொல்லி விட்டார்.

அப்படியே மூன்றாம் நாள், மூன்றாவது ஊரில் நாயகம் அவர்கள் பேசிக் கொண்டிருக்கும் பொழுது கிழவி தன் பேரனைக் கூட்டிக் கொண்டு போனாள். நாயகம் அவர்கள் பையனை அழைத்து. "இனி சர்க்கரை சாப்பிடாதே. போ" எனக் கூறினார். கிழவி நினைத்தாள், "பூ...இதைக் கூறவா மூன்றுநாட்கள் தேவை" என்று. உடனே நாயகம் அக் கிழவியைக் கூப்பிட்டு, "நீ என்ன நினைக்கின்றாய் என்பது எனக்குத் தெரிகிறது. உன் பேரன் மட்டுமல்ல. நானும் அதிகமாக சர்க்கரை சாப்பிடுகிறவன். அது தீமை தரும் என்பது எனக்குத் தெரியாது. மருத்துவர்களிடம் கேட்டேன். அவர்கள், 'அளவுக்கு மீறினால் அமுதமும் நஞ்சு' எனக் கூறி, அதை அடியோடு நிறுத்தி விடுவது' நல்லது என்றும் கூறினார்கள். மூன்றாம் நாள் முயன்றேன், என்னால் முடியவில்லை. நேற்று முயன்றேன். பாதியளவுதான் விட முடிந்தது. இன்று காலையிலிருந்து முயன்றேன். சர்க்கரை சாப்பிடுவதை நிறுத்தி விட முடிந்தது. அதனால்தான் உன் பேரனுக்கு இந்த அறிவுரை கூறினேன்" என்றார். இதைக் கேட்ட கிழவி

மட்டுமல்ல, அக் கூட்டத்தில் இருந்த அனைவருமே வியந்து போனார்கள்.

பிறருக்கு ஆலோசனையும், புத்தியும் கூறும் பேச்சாளர்களுக்கு இதுவும் ஒரு படிப்பினையாக இருக்குமென நம்புகிறேன்.

கோடையிடி இடிப்பதினாலேயே குளம் நிரம்பி விடாது. மழை பொழிந்தால்தான் குளம் நிறையும், இதை மற்றவர்கள் உணராவிட்டாலும், கோடையிடிப் பேச்சாளர்களாவது உணருவது நலமாகும். பேச்சே தேவை என்பதை என்னால் ஒத்துக் கொள்ளமுடியாது. பேச்சும் தேவை என்பதுதான் என் முடிவு. ஆனால் அப்பேச்சு ஒரு செயலை முன்வைத்துப் பேசுவதாய் இருக்கவேண்டும். செயலில்லாத பேச்சு பேச்சேயாகாது. மலையளவு பேசுவதை விட கடுகளவு செய்வது நல்லது என்பது சான்றோர் கருத்து.

ஆகவே, நீயும் பேச்சுக்களைக் குறைத்துச் செயல்களில் இறங்குவது நல்லது.

ஒரு பேராசிரியர் கூறினார். "நான் சொல்லுகிறபடி செய், நான் செய்கிறபடி செய்யாதே" என்று. ஏனெனில் பிரியாணி சாப்பிட்டுக் கொண்டே புலால் மறுத்தல் பற்றி பேசுகிற மக்களையும், கோழிக்குஞ்சு சூப் சாப்பிட்டுக் கொண்டே வள்ளலாருடைய ஜீவகாருண்யம் பற்றி எழுதுகின்ற மக்களையும் கொண்ட நாடு இது.

நீ அவ்வாறு செய்யாதே, செய்யக் கூடியதை மட்டும் சொல், செய்து கொண்டே சொல், நீ மேன்மையடைவாய்.

எழுத்துக்கள் மட்டும் திருத்தமாக இருந்து பயனில்லை. பேச்சும் தெளிவாக இருத்தல் வேண்டும். உள்ளத்தில்

உண்மை உண்டானால், வாக்கில் வன்மை உண்டாகும் என்பது சான்றோர் வாக்கு. இதிலிருந்து தெரிவது என்ன வெனில், பேச்சு தெளிவாக இருக்க வேண்டுமானால், அதற்கு முன்னே உள்ளம் தெளிவாக இருக்கவேண்டும் என்பதே, உள்ளத்தில் தெளிவில்லாதவர்கள் குளறுபடியாக வும், முன்னுக்குப் பின் முரணாகவும் பேசுவதைக் காணலாம்.

தமிழ் எழுத்துக்களை உச்சரிப்பதிலும் கவலை எடுத்துக் கொள்ளவேண்டும். 'ழ' என்ற எழுத்து நம் தமிழ் மொழியில் மட்டுமே உண்டு. பிற மொழிகள் எதிலும் இல்லை. இதனால் தமிழறிஞர்கள் இதனைச் சிறப்பு ழகரம் என்பார்கள். தமிழுக்கே சிறப்பாயுள்ள இச் சிறப்பு ழகரம் தமிழ்மக்க ளாலேயே சரிவர உச்சரிக்கப் படுவதில்லை.

வாழைப்பழம் என்பதை சிலர் வாளப்பளம் என்பார்கள்

வாழைப்பழம் என்பதை சிலர் வாயப்பயம் என்பார்கள்

மார்கழித் திருவிழா என்பதை சிலர் மார்கசி
திருவிசா என்பார்கள்.

இழுத்துக்கொண்டு போனான் என்பதை சிலர் இஸ்துகினு போனான் என்பார்கள். இது தவறு. தமிழைத் திருத்தமாக எழுதுவதைப் போலவே தெளிவாக உச்சரிக்கவும் பழகியாக வேண்டும்.

அதுமட்டுமல்ல. மாணவர்களாகிய நீங்கள் எந்த மொழியையும் வெறுக்கக் கூடாது. எல்லா மொழிகளை யும் கற்றுக்கொள்ளலாம். ஆனால் நம் தாய் மொழி யாகிய தமிழை ஆழமாகக் கற்றுக் கொள்ளவேண்டும். எந்த மொழியை எழுதினாலும் பேசினாலும் அந்தந்த

மொழிச் சொற்களையே கையாள வேண்டும். ஒரு மொழியை எழுதும்போது பிறமொழி எழுத்துக் களைக் கலப்பதும், ஒரு மொழியில் பேசும்போது பிறமொழிச் சொற்களைக் கலந்து பேசுவதும் தவறு. இதனைக் கலப்பட மொழியெனக் கூறி அறிஞர்கள் வெறுத்துவிடுவர்.

பல ஆண்டுகளுக்கு முன்னே நான் சென்னை கடற் கரையிலிருந்தேன். அங்கு ஒரு கல்லூரி மாணவன் மற்றொரு மாணவனை நோக்கி, 'ஏன் பிரதர் லாஸ்ட் வீக் பீச்சுக்கு வரல' என்று கேட்டான். அதற்கு மற்றவன் 'வரலாம் என்று தான் ஸ்டார்ட் பண்ணினேன்; மதரும் ஃபாலோ பண்றேன்னா, ஃபீமேல்ஸ்ஸை அழைத்துக் கொண்டு வருவது நான்சென்ஸ் என்று ஸ்டாப் பண்ணிட்டேன் பிரதர்' என்றான். இது தமிழா? ஆங்கிலமா? தமிழ் ஆங்கிலமா? ஆங்கிலத்தமிழா? காலக் கேடா என்பது புலப்படவில்லை.

மாணவர்களாகிய நீங்கள் இத்தவறைச் செய்யக் கூடாது. பல மொழிச் சொற்களைக் கலந்து எழுது கிறவனும், பேசுகிறவனும், ஒரு மொழியிலும் பற்று இல்லாதவன் என்று ஆகி விடுவான். அந்தப் பழி உங்களைச் சேர விடக்கூடாது.

## க. நாடு போகும் போக்கு

கடந்த நூற்றாண்டுக்கு ஒரு பெருமை உண்டு. அப் பெருமை சான்றோர்கள் பலரைப் பெற்றுக் கொடுத்த தால் ஏற்பட்ட பெருமை. வடலூர் இராமலிங்க அடிகள், மாயூரம் வேதநாயகம் பிள்ளை, சுயப்பாக்கம் சதாசிவச் செட்டியார், அஷ்டாவதானம் கல்யாண சுந்தர

முதலியார், உ. வே. சாமிநாத ஐயர், திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் சுவாமிகள், வ. உ. சிதம்பரனார், நாவலர் சோமசுந்தர பாரதியார், மறைமலை அடிகள், திரு. வி. கல்யாணசுந்தர முதலியார், ந. மு வேங்கடசாமி நாட்டார் ஐயா, பண்டிதமணி கதிரேசன் செட்டியார், தமிழ்க்காசு கா. சுப்ரமணிய பிள்ளை, மகாகவி சுப்ரமணிய பாரதியார், புரட்சிக் கவிஞர் பாரதிதாசனார் முதலிய சான்றோர்களைப் பெற்றுக்கொடுத்த நூற்றாண்டு கடந்த நூற்றாண்டு, இந்தப் பெருமை அதற்கு உண்டு.

இந்த நூற்றாண்டுக்கு ஒரு பெருமை உண்டு. அது கடந்த நூற்றாண்டிற் பிறந்த அத்தனை பேருக்கும் நூற்றாண்டு விழாக் கொண்டாடுகிற பெருமை இந்த நூற்றாண்டுக்கு உண்டு.

அடுத்த நூற்றாண்டுக்கு ஒரு பெருமை வரப்போகிறது. அது அப்போது பள்ளியில் படிக்கின்ற வரலாற்று மாணவர்கள், "முன்னொரு காலத்தில் சான்றோர்கள் என்று சிலர் வாழ்ந்ததாகத் தெரியவருகிறது" என்று படிக்கப் போகிறார்கள் என்பதே. சான்றோர்கள் எவரையும் காண முடியாமல் போய்விடுமோ என்று நினைக்க வேண்டியிருக்கிறது..

உண்மை, நேர்மை, ஒழுக்கம், பண்பாடு, நம்பிக்கை, நாணயம், ஈகை, இரக்கம், கொடை என்பவைகள் விளைந்த புண்ணிய பூமி நம் தமிழ்நாடு.

இவையத்தனையும் கூனி, குறுகி, கருகி, பட்டுப் போய் விட்டன. அது மட்டுமல்ல; அவை விளைந்த பூமியில் பொய், பித்தலாட்டம், புனை சுருட்டு, சூது, வஞ்சனை, பொறாமை, ஏமாற்றம், களவு, இலஞ்சம், கலப்படம் முதலியவை விளையத் தொடங்கி விட்டன.

இன்று திரைப்படங்களில் பல நல்லவைகளாக இல்லை. அவை ஒழுக்கக் கேடுகளை வளர்க்கின்றன. மனைவியையோ, மக்களையோ கூட்டிக் கொண்டு போய்ப் பார்க்கிற மாதிரி இல்லை. யார், யாரையோ கூட்டிக் கொண்டு போய்ப் பார்க்கிறமாதிரி இருக்கின்றன. நம் நாட்டிலுள்ள சில பத்திரிகைகள் முன்பு பொழுது போக்குக் கதைகளை எழுதின. பின்னர் நகைச்சுவைக் கதைகளை எழுதின. பின்னர் காதல் கதைகளை எழுதின. பின்னர் காமக் கதைகளை எழுதின. இப்போது ஆபாசக் கதைகளையே எழுதிக் கொண்டிருக்கின்றன.

இவற்றை இப்படியே வளரவிடலாமா? தடுப்பது யார்? எப்படித் தடுப்பது? சிந்திக்க வேண்டும். இப்படியே போனால் நாடு என்னாகும்?

இக்காலத்தில் இந்த நிலையில் தான் மாணவர்களாகிய நீங்கள் வாழ்ந்து தீர வேண்டி இருக்கிறது. வாழ்வில் வெற்றி பெற உங்களுக்கு இரு கருவிகள் வேண்டும். ஒன்று விழிப்பும். மற்றொன்று பொறுப்பும் ஆகும்.

## கா. ஆங்கிலப் பள்ளிகள்

தமிழ்நாட்டில் தமிழ் பயிற்று மொழியாக இல்லை என்பது மட்டுமல்ல. ஆங்கிலம் பயிற்று மொழியாக உள்ள எல். கே. ஜி., யு கே. ஜி. என்ற பள்ளிகள் தமிழகத்தின் சிற்றூர்களிலெல்லாம் நச்சுப்பூச்சிகள் போல வெகு விரைவாகப் பரவி வருகின்றன.

இப்பள்ளிகளில் பிஞ்சு உள்ளம் படைத்த தமிழ்க் குழந்தைகளின் உடையை மாற்றி உணவை மாற்றி,

உறக்கத்தை மாற்றி, மொழியை மாற்றி, பழக்க வழக்கங்களை மாற்றி, தமிழ்ப் பண்பாட்டையே மாற்றி வருகின்றனர்.

இக்குழந்தைகளின் எதிர்காலம் எப்படி இருக்கும் என்று எண்ணும்போது நம் நெஞ்சம் புண்ணாகி விடுகிறது.

சிற்றூரில் உள்ள விவசாயி ஒருவன் பம்பாய்க்குச் சென்று கடற்கரையைப் பார்த்தான். அங்கு ஐந்து வயதுள்ள சிறுவன் ஒருவன் கால்சட்டை, காலணி, மேல் சட்டை, தொப்பி முதலியவைகளை அணிந்து கொண்டு, கடற்கரை அலையில் இறங்கி. அலையின் பின்னே ஓடுவதும், அது வரும்போது திரும்புவதுமாக விளையாடிக் கொண்டிருந்தான். அக் குழந்தையின் எதிரில் ஒரு ஆள் உட்கார்ந்து இதை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்ததைக் கண்ட விவசாயி பயந்து போய், அந்த ஆளிடம் பையனைக் கூப்பிடுங்கள் அபாயம் ஏற்பட்டுவிடும் என்று பதறிப் போய்க் கூறினான். அதற்கு அந்த ஆள் அது பையன் அல்ல. 'பெண்' என்று கூறியதும், விவசாயி அது பெண்ணா? என்று வியந்து கேட்டான். ஆம் என்று பதில் வந்ததும், நீங்கள் தான் அப்பெண்ணின் அப்பாவா? என்று கேட்டான். அதற்கு வந்த விடை அப்பா அல்ல, அம்மா என்பதே. விவசாயி வியப்பில் மூழ்கி விட்டான். ஆணா? பெண்ணா? என்று இப்போதே அறிய முடியவில்லை என்றால், எல். கே. ஜி., யு. கே. ஜி. யில் படிக்கும் பெண் குழந்தைகள் இன்னும் இருபது ஆண்டுகள் கழித்து எவ்வாறு காட்சியளிக்கும். தமிழும், தமிழகமும என்னவாகும் என்று சிந்தித்துப் பார்க்க வேண்டியிருக்கிறது.

மாணவர்களாகிய நீங்கள் உங்கள் குடும்பத்தில் மட்டு மல்ல. அடுத்துள்ள குடும்பங்களிலும் இத்தவறு நடவாதபடி பார்த்துக்கொள்ள வேண்டும். இன்றேல் தமிழ்மொழி அழியும். தமிழ் இனம் வாழாது. தமிழகமே பாழ்பட்டுப் போய்விடும்.

ஒரு மொழி அழிந்தால் அந்த இனம் அழியும், அவர்கள் வாழும் நாடும் பாழ்படும் என்பது நல்லறிஞர்களின் கருத்து.

## கி. பயிற்று மொழி

நிலா நிலா ஓடி வா நில்லாமல் ஓடி வா
மலை மேல் ஏறி வா மல்லிகைப்பூ கொண்டுவா

என்று தமிழ்நாட்டுப் பெண்கள் தங்கள் பிள்ளைகளுக்கு நிலவைக் காட்டி சோறு ஊட்டி மகிழ்வதுண்டு. இதே பாடலை பர்மாவிலும். மலேயாவிலும், இலங்கையிலும் பாடக் கேட்டிருக்கிறேன். எங்கு பாடினாலும் இப்பாடல் தமிழ் நாட்டுக்கே உரிய சொத்து. இதைப் போன்ற ஒரு பாடல் அமெரிக்காவிலும், இரஷ்யாவிலும் இருக்கலாம். அங்குள்ள தாய்மார்கள் அக்குழந்தைகளுக்கு இப் பாடலைச் சொல்லிக் காட்டியிருக்கலாம். அக்குழந்தைகள் நிலவை ஓடி வரச் சொல்லியும், அது வராததால் அக் குழந்தை களே நிலவுக்குப் போய்விட்டன.

இது ஏன் என்று ஆராய்ந்த பொழுது அமெரிக்காவிலும் இரஷ்யாவிலும் உள்ள குழந்தைகளுக்கு விஞ்ஞானம் தாய்மொழியிலேயே கற்றுக் கொடுக்கப்படுகிறது. நம் நாட்டில் விஞ்ஞானம் பிற மொழிகளில் கற்றுக்

கொடுக்கப்படுகிறது. நம் நாட்டிலும் விஞ்ஞானத்தைத் தாய்மொழியில் கற்றுக் கொடுத்திருந்தால் நம் பிள்ளை களும் நிலவுக்குப் போயிருக்க முடியும். இதில் நம் நாட்டு அரசியல் வாதிகளும், அரசாங்கமும், கல்வித்துறை அறிஞர் களும் கருத்தைச் செலுத்தவில்லை.

ஒரு காலத்தில் ஆங்கில மொழியின் மூலந்தான் விஞ்ஞானத்தை அறியமுடியும் என்றிருந்தது. அந்த முடிவை ஜப்பானியமொழி விஞ்ஞானமும், ஜெர்மன் மொழி விஞ்ஞானமும், இரஷ்ய மொழி விஞ்ஞானமும் தவிடு பொடியாக்கி விட்டன. இதையறிந்த பிறகாவது தமிழ்ப் பிள்ளைகளுக்கு தமிழ் நாட்டில் பயிற்று மொழி தமிழ் மொழி யாகச் செய்திருக்க வேண்டும். இல்லையானால், ஒரு காலத்தில் வந்தே தீரும். மாணவர்களாகிய நீங்கள் கல்வித் துறையில் பயிற்று மொழி தமிழாக வருவதை விரைவில் விரும்பி வரவேற்பது நல்லது.

## கீ. உயிரெழுத்துக்களின் ஒலி

எந்த மொழிக்கும் இல்லாத பல சிறப்புகள் நம் தாய்மொழியாகிய தமிழுக்கு மட்டுமே உள்ளன. அவற்றில் ஒன்று அ, இ. உ, எ, ஒ; என்ற ஐந்து உயிரெ ழுத்துக்களும் உதடுகளால் மட்டுமே ஒலிக்கக் கூடியதாக அமைந்திருப்பது. இதை ஒலிக்க தொண்டை, நாக்கு, பற்கள் முதலிய எதன் உதவியும் தேவையில்லை. இரண்டு உதடுகளைத் திறக்கும் போதே 'அ', அவ்வுதடுகளைச் சுருக்கும் போதே 'உ', அதை அப்படியே உயர்த்தும் போதே 'ஒ', கீழ் உதடை இறக்கும் போதே 'எ', இரண்டு உதடுகளையும் அகற்றி இழுக்கும் போது 'இ' என்ற ஒலிகள் உண்டாகி விடுகின்றன. இந்த இரண்டு

உதடுகளும் இவ்வாறுதான் அசைய முடியும். வேறு வகையாக அசைக்க முடியாது. நீங்கள் வேண்டுமானால் முயன்று பார்க்கலாம்.

இந்த உதடு அசைவையே உயிர் ஒலியாகக் கொண்டு அதற்கு உயிர் எழுத்துக்களை அமைத்த தமிழ்ச் சான்றோர்களது ஆற்றல் எண்ணி எண்ணி வியக்கக் கூடிய ஒன்று.

இந்த உயிர் எழுத்துக்கள் ஐந்தையுமே ஆங்கிலேயர்கள் தங்களுடைய உயிர் எழுத்துக்களாக எ, இ, ஐ, ஓ, யு என அமைத்திருக்கின்றனர். தமிழில் இந்த ஐந்து எழுத்துக்களையும் குறில் என்றும், இதை ஆ, ஈ, ஊ, ஏ, ஓ என நீட்டி ஒலிப்பதை நெடில் என்றும் அமைத்திருக்கின்றனர். ஆங்கிலத்தில் வடமொழியில் இது இல்லை. குறிப்பாக எ, ஒ என்ற ஒலிகளுக்கு எழுத்துக்களே இல்லை. எலி, எடு, கெடு, எட்டு என்று ஆங்கிலத்தில் எழுத முடியாது. ஏலி, ஏடு, கேடு, ஏட்டு என்றுதான் எழுத முடியும். அதேபோல கொடி, பொடி, கொடு, கொட்டு என்று ஆங்கிலத்தில் வடமொழியில் எழுத முடியாது. கோடி, போடி, கோடு, கோட்டு என்றுதான் எழுத முடியும். இக்குறைபாடு இல்லாமல் தமிழ்ச் சான்றோர்கள் மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே ஒலி இலக்கணத்தை அமைத்திருக்கிறார்கள். அது அ, இ, உ, எ, ஒ என்று ஒலிப்பதற்கு ஒரு மாத்திரை அளவு; ஆ, ஈ, ஊ, ஏ, ஓ என்று ஒலிப்பதற்கு இரண்டு மாத்திரை அளவு; க், ச், ப், ம், த் என்று ஒலிப்பதற்கு அரை மாத்திரை அளவு. இவ்வாறு கூறுகிற நம் தமிழ் இலக்கண நூலாகிய தொல்காப்பியத்தின் பெயரைக்கூட ஆங்கில எழுத்துக்களில் எழுத முடியாது. தோல்காப்பியம் என்றுதான் எழுத முடியும். அதை மொழிபெயர்ப்பவன்

'லெதர் லிட்டரேச்சர்' என்றுதான் மொழிபெயர்ப்பான். இக்குறைபாடு தமிழுக்கு இல்லை. எப்படி நம் தாய் மொழியின் ஒலிச்சிறப்பு. இதை எண்ணி எண்ணிப் பெருமையடைய மாணவர்களாகிய உங்களுக்கு உரிமையுண்டு.

## ௯. படிப்பினை

காந்தியடிகளுக்கு வயது ஒன்பது. பள்ளி மாணவப் பருவம். ஒரு நாள் பார்த்தார் அரிச்சந்திரன் நாடகத்தை. நாடகத்தின் கரு உண்மையைப் பேசுதல் என்பது. அதை ஒரு படிப்பினையாக ஏற்றுக் கொண்டு, இனி உண்மையே பேசுவது என்ற உறுதியும் எடுத்துக் கொண்டார். வாழ்நாள் முழுவதும் செயல்படுத்திக் காட்டினார். உலகம் அவரை ஒரு உயர்ந்த மனிதராக ஏற்றுக் கொண்டிருக்கிறது. நம்மில் எத்தனையோ பேர் அரிச்சந்திரன் நாடகத்தைப் பார்த்தோம்? எத்தனை பேர் அந்த படிப்பினையை ஏற்றுக் கொண்டோம்? இல்லை.

எனக்கு இளமையில் ஒரு நல்ல வாய்ப்பு கிடைத்தது. 60 ஆண்டுகளுக்கு முன்பு மைசூரில் தசரா பண்டிகையைப் பார்த்துவிட்டு பெங்களூருக்குத் திரும்பினேன். அங்கு சர். விஸ்வேசர ஐயா வந்திருக்கிறார் என்று கேள்விப் பட்டு அவரைப் பார்க்கப் போனேன். அனுமதி கிடைக்கவில்லை. அரண்மனைக் கட்டிட ஒப்பந்தக்காரர் ஒருவர் துணையுடன் மறுபடியும் அவரைப் பார்க்கப் போனேன். என்னுடன் வந்த அந்த ஒப்பந்தக்காரர் "திருச்சியிலிருந்து ஒரு பொதுத் தொண்டர் உங்களைப் பார்க்க வந்திருக்கிறார்", என்று கூறினார். சாய்வு நாற்காலியில் சாய்ந்திருந்த சர். விஸ்வேசரய்யா

நிமிர்ந்து உட்கார்ந்து "தொண்டா? அதிலும் பொதுத் தொண்டா? அதுவும் இப்பையனால் செய்ய முடிகிறதா? அதைச் செய்வது மிகவும் கடினமாயிற்றே" என்று கூறி, தன் நிலையை விளக்கினார்,

"சில ஆண்டுகளுக்கு முன்பு என் அலுவலகத்திலிருந்து அரசாங்க வேலையாக 40 மைல் தொலைவிலுள்ள ஒரு ஊருக்குச் சென்றிருந்தேன். பணி முடிந்து திரும்பும் பொழுது டிரைவர், காரை ஒரு கிளைப் பாதையில் திருப்பினான். காரை நிறுத்தச் சொல்லி காரணம் கேட்டபோது, 'பக்கத்து ஊரில் நம் உறவினர் திருமணத் திற்குச் சென்று வெற்றிலை பாக்கு வாங்கி வரும்படி அம்மா கூறினார்கள், என்று சொன்னான். நான் உடனே அதைத் தடுத்து அலுவலகத்திற்கு வந்து, அரசாங்க வண்டியை விட்டு விட்டு, என் வண்டியை எடுத்துக் கொண்டு மறுபடியும் 35 மைலில் உள்ள அந்த திருமணத் திற்கு சென்று திரும்பினேன்" என்று பேசிக் கொண்டே தன் மேசையைத் திறந்து, வலது கையில் ஒரு பேனாவையும், இடது கையில் ஒரு பேனாவையும் எடுத்துக் கொண்டு, இது அரசாங்கத்தின் பேனா. அதிலிருக்கும் மை அரசாங் கத்தின் மை. அரசாங்கத்தின் வேலைகள் அனைத்தையும் இந்த பேனா செய்கிறது. இடது கையில் இருக்கும் இந்தப் பேனா என் சொந்தப் பேனா. உறவினர் வேலைகளை யும், வீட்டு வேலைகளையும் இந்தப் பேனா செய்கிறது. இம்மாதிரி செய்ய இப்பையனால் முடியுமா?" என்று வியப்போடு கேட்டார்? உடனே கட்டிட ஒப்பந்தக் காரர் என் பக்கம் திரும்பி, கேட்டீர்களா? 'தம்பி, என்ன சொல்கிறீர்கள்' என்றார்? சர். விஸ்வேசர ஐயா அவர் களுக்கு வணக்கத்தைக் கூறி, என்னுடன் வந்த நண்பரிடம், வந்த வேலை முடிந்து விட்டது, வாருங்கள்' என மகிழ்ச்சியோடு கூறித் திரும்பினேன். விஸ்வேசர

ஐயா அவர்களின் அறிவுரை என் காதுகளில் ஒவ்வொரு வினாடியும் ஒலித்துக் கொண்டேயிருந்தது. அது ஒரு நல்ல படிப்பினையாக இருந்ததால், அதை பேய் பிடிப்பது போலப் பிடித்துக் கொண்டு உறுதியாக செயல்படுத்தி வருகிறேன். இன்றைக்கு எனக்கு ஏதேனும் ஒரு செல் வாக்கும் மதிப்பும் இருக்கிறது என நீங்கள் நம்பினால், அது சர். விஸ்வேசர ஐயா அவர்களின் அறிவுரைகளால் விளைந்தது என்றே கூற வேண்டும்.

நமக்கு கண், காது, வாய் மூன்றும் இருக்கின்றன. எத்தனையோ இலக்கியங்களைப் படிக்கிறோம். எத்தனையோ அறிஞர்களின் சொற்பொழிவைக் கேட் கிறோம். நாட்டில் எத்தனையோ நிகழ்ச்சிகளைப் பார்க் கிறோம். நாம் எவற்றையும் ஒரு படிப்பினையாக ஏற்று வாழ்க்கைக்குப் பயன்படுத்திக் கொள்வதில்லை. இது பெருந் தவறு. மாணவர்களாகிய நீங்கள் படிப்பவை களை, பார்ப்பவைகளை, கேட்பவைகளை, கருத்தூன்றிச் சிந்தித்து அவற்றில் உள்ள நல்லவைகளைப் படிப்பினை யாக ஏற்று, வாழ்க்கைக்குப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். இன்றேல் படிப்பதும், பார்ப்பதும், கேட்பதும் பயனற்றதாகி விடும்.

## கூ. முடிவுரை

மாணவ, மாணவிகளே! உங்களுக்கு இறுதியாகவும், உறுதியாகவும், ஒன்றைக் கூறுகிறேன். நீங்கள் எப்போதும் உங்கள் உள்ளத்தைத் தூய்மையாக வைத்துக் கொள்ளுங்கள், சொல்லையும் தூய்மையாக வைத்துக் கொள்ளுங்கள். அப்போதுதான் உங்கள் செயல்கள்

அனைத்தும் தூய்மையானவைகளாக ஒளிவீசும், பிறருக்கும் பயன்படும்.

நல்லதையே எண்ணி, நல்லதையே சொல்லி, நல்லவைகளையே செய்கிறவர்கள், நல்வாழ்வு வாழ்வார்கள் என்பது தமிழ்ச் சான்றோர்களின் கருத்து. மேலும் உங்களுடைய அருமையான காலத்தை நான் வீணாக்க விரும்பவில்லை. பல பல பேசினேன் கேட்பதைக் கேட்டீர்கள். அவற்றை நன்கு சிந்தித்து, அல்லன தள்ளி, நல்லன கொண்டு, நாட்டுக்கும், மொழிக்கும், மக்களுக்கும் நற்றொண்டு செய்து, சிறப்பெய்தி நல்வாழ்வு வாழ வேண்டும் என வாழ்த்துவதோடு என் சொற்பொழிவை முடித்துக் கொள்ளுகிறேன். இந்த நல்ல வாய்ப்பை எனக்கு அளித்த தலைவருக்கும், தலைமை ஆசிரியருக்கும், ஆசிரியர்களுக்கும் மாணவர்களாகிய உங்களுக்கும் என் நன்றியும், வணக்கமும் கூறுகிறேன்.

# Y

## மாணவியருக்கு

மாணவியர்களே! உங்களை நினைக்கும் பொழுதெல்லாம் எனக்கு 'Y' என்ற எழுத்தின் நினைவே வருகிறது. 70 ஆண்டுகளுக்கு முன்பு அதாவது 1911-ல் அரசாங்கம் எடுத்த மக்கள் எண்ணிக்கைக் கணக்கின்படி படித்த பெண்கள் நூற்றுக்கு ஒருவர் கூட இல்லை. நூற்றுக்கு முக்கால். அதுவும் சரியல்ல – சரியாகச் சொன்னால், ஆயிரம் பெண்களில் படித்தவர்கள் ஏழு பேர்கள் மட்டுமே.

கடந்த 75 ஆண்டுகளாக நல்லறிஞர்கள் பலர், பெண் கல்வி முன்னேற்றத்தைப் பற்றிப் பேசி, இன்றைக்கு நூறு பேர்களில் 15 பெண்கள் படித்திருக்கிறார்கள். இதுவும் போதாது. இன்னும் சரியாக தமிழகத்தில் பெண்கல்வி பரவ வில்லை. கட்டாயம் பரவியாக வேண்டும்.

குடும்பம் ஒரு வண்டி. சமூகம் ஒரு சாலை. வண்டியை இழுத்துச் செல்லும் மாடுகள் இரண்டும் சரிசமமாக வலிமை பெற்றிருத்தல் வேண்டும். இன்றேல் வண்டி. சாலைகளில் சரியாக ஓடாதது போலச் சமூகத்தில் குடும்பமும் சரியாக நடைபெறாது. அதிலும் ஒரு மாடு குருடாக இருக்குமானால், வண்டி எப்படி ஓடாதோ, அப்படியே சமூகத்தை நடத்திச் செல்லுகிற கணவன் மனைவி களில் ஒருவர் கல்வி அறிவில்லாத குருடராக இருப்பாரே யானால், இல்வாழ்க்கை இனிது நடைபெறாது.

''கல்வி ஆணுக்கும் தேவை; பெண்ணுக்கும் தேவை'' என்று 1400 ஆண்டுகளுக்கு முன்பே கூறியவர் நபிகள் நாயகம், கல்வியைக் கண்ணுக்கு ஒப்பிட்டவர் திருவள்ளுவர்.

> ''கண்ணுடையர் என்பவர் கற்றோர்—முகத்திரண்டு
> புண்ணுடையர் கல்லா தவர்''

என்பது அவருடைய வாக்கு.

ஆண் குழந்தைகளைப் படிக்க வைப்பது போல பெண் குழந்தைகளையும் படிக்க வைத்தே ஆக வேண்டும். ஆனால் எதுவரை?... என்பது ஒரு கேள்வி. அதைத்தான் தலைப்பில் உள்ள 'Y' என்ற எழுத்து நமக்கு வழிகாட்டிக் கொண்டிருக்கிறது. உண்ணும் உணவுக்கும்,

உடுத்தும் உடைக்கும், வாழும் இடத்துக்கும் ஒரு அளவு இருப்பது போலக் கல்வி கற்பதற்கும் ஒரு அளவு இருத்தல் வேண்டும். 'Y' என்ற எழுத்தை மறுபடியும் பாருங்கள். கீழே உள்ள கோடு ஒரு வழி மேலே உள்ள இரு கோடுகளும் இரு வழிகள், இந்த மூன்று வழிகளும் சந்திக்கும் இடம் முச்சந்தி.

கீழ்க்கோடு 10-ம் வகுப்பு வரை உள்ள உயர்நிலைப் பள்ளிப் படிப்பு. மேலே உள்ளே வலது புறக்கோடு கல்லூரிப் படிப்பு. இடதுபுறமுள்ள கோடு குடும்பப் படிப்பு, மூன்றையும் இணைத்திருக்கும் முச்சந்தி மேல் நிலைப்பள்ளிப் படிப்பு.

உயர்நிலைப் பள்ளிப் படிப்பை முடித்த பெண்கள் மேல்நிலைப் பள்ளியில் படிக்கும் பொழுது, அவர்கள் இம்முச்சந்திப்பில் நிற்கிறார்கள். அதற்குமேல், அவர்களுக்கு இரு வழிகள் தெரிகின்றன. எந்த வழியில் செல்வது? என்பதை மகளிர் அந்த முச்சந்தியில் நின்று சிந்திக்க வேண்டியிருக்கிறது. ஒரே கேள்வி தான். கல்லூரியில் படித்து வேலை பார்ப்பதா? திருமணம் செய்து குடும்பத்தை நடத்துவதா? இதைப் பெற்றோர்களில் பலர் சிந்திப்பதில்லை. அதைப் பெண் மக்களிடமே விட்டு விடுகிறார்கள். ஆகவே பெண் குழந்தைகள் தான் தங்கள் எதிர்காலத்தை நன்கு சிந்தித்து ஏதாவது ஒரு வழியில் நடந்தே ஆக வேண்டும்.

வேலைக்குப் போய்ப் பொருள் தேட வேண்டும் என்று விரும்புகிற பெண்களும், பொருளைத் தேடித் தான் வாழ வேண்டும் என்ற நிலையில் உள்ள பெண்களும் கல்லூரிக்குச் சென்று படிப்பதே நலமாகும். இதில் கருத்து வேற்றுமைக்கு இடமில்லை, சிந்திக்க வேண்டிய வேலையும் இல்லை.

திருமணம் செய்து இல்வாழ்வில் ஈடுபட்டு குடும்பத்தை நடத்த வேண்டும் என்று விரும்புகிற பெண்கள் இடது புறப்பாதையில் நடந்தாக வேண்டும். காரணம், இல்லறத்தை நடத்தும் குடும்பப் பெண்களுக்கு உயர் நிலைப் பள்ளிப்படிப்பே போதுமானது. வேண்டுமானால் மேல் நிலைப் பள்ளி வரை படித்து படிப்பை நிறுத்திக் கொள்ள லாம். இந்த முடிவு என் முடிவு மட்டுமல்ல; பல அறிஞர்களின் முடிவும், பல பெற்றோர்களின் முடிவும் ஆகும்.

நம்முடைய சமூகம் சரியில்லை, கல்லூரியில் படித்த பெண்கள் பலருக்குத் திருமணம் ஆவதில்லை. சில திருமணங்களே நடைபெறுகின்றன. அந்தத் திருமணங் களிலும் வரதட்சணைக் கொடுமைகள் தலைவிரித்தாடு கின்றன. இதனால் சில செல்வந்தர் வீட்டுத் திருமணங்கள் மட்டுமே நடைபெறுகின்றன. ஏழைகள் வீட்டுத் திருமணங் களும், நடுத்தர வீட்டுத் திருமணங்களும் நடக்காமல் போய் விடுகின்றன.

கல்லூரியில் படித்துப் பட்டம் பெற்ற பெண்களை, உயர்நிலைப் பள்ளியில் படித்த ஆண்களுக்கோ விவசாயிகளுக்கோ, வியாபாரிகளுக்கோ, தொழிலாளர் களுக்கோ, திருமணம் செய்து கொடுக்க முடிவதில்லை.

நம் சமூகத்தில் கல்லூரியில் படித்த பெண்கள் அதிக மாகவும், கல்லூரியில் படித்துப் பட்டம் பெற்ற ஆண்களின் எண்ணிக்கை குறைவாகவும் இருப்பதால், அவர்கள் வரதட்சணைத் தொகையை அதிகமாகக் கேட்கிறார்கள்.

ஒரு பெண்ணைக் கல்லூரியிற் படிக்க வைத்து, அறிவாளியாக்கித் தனக்கு கொடுத்கிற மாமனாருக்கு, கல்லூரியில் படித்த ஒரு மாணவன் நன்றி செலுத்தி

யாக வேண்டும். அதைச் செய்வதில்லை. சும்மாவும் இருப்ப தில்லை. ஏன் படிக்க வைத்தீர்? என்று மாமனாருக்கு அபராதம் போடுவது போலிருக்கிறது. இது இன்றைய நம் சமூகத்தின் கேடு.

மூன்று, நான்கு பெண்களைப் பெற்றவர்கள் எப்படியோ கடன்பட்டு, ஒரு பெண்ணை கட்டிக் கொடுத்து விடுகிறார்கள். மற்ற பெண்களுக்கு திருமணம் செய்ய முடிவதில்லை. அதன் பிறகுதான் பலர் "முதல் பெண்ணை கல்லூரியில் படிக்க வைத்தது தவறு" என்று நினைத்து, இரண்டாவது மூன்றாவது, பெண்களை உயர்நிலைப் பள்ளியோடும், மேல்நிலைப் பள்ளியோடும் நிறுத்தி விடுகிறார்கள்.

கல்லூரியில் படித்த பெண்களில் பலருக்குத் திருமணம் ஆகாமைக்குக் காரணம் வரதட்சணை மட்டுமல்ல. இன்னும் பல. அவற்றைப் பெற்றோர்கள் வாயிலாகவே கேளுங்கள்.

ஒரு நடுத்தர குடும்பத்தினர்: "என் சொத்துக் களையெல்லாம் செலவழித்துப் படிக்க வைத்து விட்டேன். திருமணம் செய்யவும், நகைகள் போடவும், சீர் வரிசை செய்யவும் என்னிடம் பணம் இல்லை. நான் என்ன செய்வேன்?"

ஒரு செல்வர் : "என் பெண்ணை திருமணம் செய்து கொடுக்க விரும்புகிறேன். அதற்குரிய வசதி எனக்குண்டு. ஆனால் என்னுடைய பெண் திருமணமே வேண்டாமென்கிறாள். நான் என்ன செய்வது?"

ஏமாற்றமடைந்தவர்:— "என் பெண். நல்ல பெண். உயர்நிலைப் பள்ளியில் படித்தவரை என் பேச்சைக் கேட்டு

நடந்தாள். கல்லூரியில் படிக்கத் தொடங்கியதும் என் பேச்சைக் கேட்பதில்லை. நான் என் செய்வேன்?''

சாதி விரும்பி: ''என் பெண்ணை டாக்டருக்குப் படிக்க வைத்தேன். சமூகத்தில் எங்கள் சாதியில் ஒரு மணமகனைப் பார்த்து திருமணம் பேசினேன். என் மகள் ஒப்பவில்லை. அதை நான் வற்புறுத்தினேன். திருமணத்துக்கு ஒப்புவதானால், சாதியைப் பாராமல் நான் காதலித்தவனைத்தான் மணம் புரிவேன். இன்றேல் இறந்து விடுவேன் என்று கூறுகிறாள். நான் என்ன செய்வது?''

சீர்திருத்தம் விரும்பி: ''நான் பல ஆண்டுகள் சாதி. ஒழிய வேண்டுமென்று கூறிக் கொண்டிருந்தேன். ஒன்றும் நடைபெறவில்லை. இப்பொழுது கலைக்கல்லூரிகளிலும், பொறியியற் கல்லூரிகளிலும், மருத்துவக் கல்லூரிலும், சட்டக் கல்லூரிகளிலும், பெண்கள் படிக்க வந்த பிறகும், அலுவலகங்களில் வேலை செய்ய வந்த பிறகும், கலப்பு மணங்கள் பெருகி வருகின்றன. இது சாதி ஒழிய ஒரு நல்ல வழி. இதைக் கண்டு மகிழ்ச்சியடைகிறேன். இது மேலும் பரவ வேண்டுமென்று நான் ஆசைப்படுகிறேன்.''

பழமை விரும்பி : பெண்கள் கல்லூரியில் கால் வைத்த உடனேயே அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு முதலிய பெண்களுக்குரிய நான்கு குணங்களும் மறையத் தொடங்கி விடுகின்றன. 16 வயது முதல் 22 வயது வரை பெண்கள் இல்வாழ்க்கைக்குப் பக்குவம் அடைந்திருக்கின்றனர். அந்தப் பக்குவம் பெற்ற பெண்களுக்கு உரிய காலத்தில் திருமணம் செய்யாமல், ஆண் மக்களோடு சேர்த்து, மருத்துவ, பொறியியல், சட்ட, கலைக்கல்லூரிகளில் படிக்க வைப்பதினால், ஒழுக்கம் கெடுவதற்கு வாய்ப்புகள் ஏற்பட்டு

விடுகின்றன. இந்த நிலையில் பையன்களிடமும், பெண்களி டமும் ஒழுக்கத்தைப் பற்றி போதிப்பது பயனற்று விடுகிறது. அது நெருப்பையும், பஞ்சையும் ஒன்றாக வைத்து, 'நெருப்பே! நீ எரிக்காதே. பஞ்சே! நீ எரியாதே!''— என்று கூறுவது போலிருக்கிறது. இது நமது பண்பாட்டுக்கு ஏற்றதல்ல.

சாதகம் விரும்பி : ''எனக்கு எல்லா வசதிகளும் உண்டு. அதனால் என் மூன்று பெண்களில் ஒன்றை டாக்டராகவும், மற்றொன்றை இஞ்சினியராக்வும், மற்றொன்றை எம். ஏ. பட்டம் பெறும் வரையிலும் படிக்க வைத்தேன், மூன்றுக்கும் திருமணம் ஆகவில்லை. காரணம், வந்த சாதகங்களில் பல, பெண்ணின் சாதகத்தோடு பொருந்தவில்லை. நான்கு சாதகங்கள் தான் பொருந்தின, அதில் மூன்று சாதகத்தினர் என் பெண்களின் வயதைவிட இளையவர்கள். மற்றொரு சாதகத்தில் செவ்வாய்தோசம் இருக்கிறது. எப்பொழுது என் மகள்களுக்குத் திருமணம் நடைபெறும்?''

அழகு விரும்பி : என் பெண் நல்ல அழகு. தொடக்கப் பள்ளி முதல் மேல்நிலைப்பள்ளி படிப்புவரை அவள் படிப்பும், வயதும், உடலும் மட்டுமல்ல. அறிவும், அழகும் வளர்ந்து கொண்டே வந்தன. கல்லூரியில் படித்து, பின் டாக்டருக்குப் படித்து, தொழிலையும் நடத்திய பிறகு, அவளுக்கு வயது 27, 28 ஆயிற்று. 30க்கு மேற்பட்ட வயதுள்ள வரனைத் தேடுவது கடினமாகப் போயிற்று. 32 வயதுக்கு மேல் உள்ளவர் இரண்டாம் தாரமாகப் பெண் கேட்டார். கொடுக்க முடியவில்லை. சிலர் முதல்தாரமாகவே வந்து கேட்டார்கள். அவளுக்கு வயது 32 ஆகியும் மறறவர்கள் ஏன் பெண் கொடுக்கவில்லை? என்று சிந்திக்க வேண்டி வருகிறது. அவள்

அழகும் வெம்பிப் போயிற்று. நான் என்ன செய்வேன்? என் மகளுக்குத் திருமணமே ஆகாதா?

உறவு விரும்பி : "எனக்கு ஒரே பெண். என் தங்கை மகன் என் மகளை மணப்பானென்று அவனையும் நானே எம். ஏ. வரை படிக்க வைத்தேன், என் பெண்ணும் பி. ஏ., வரை படித்துப் பட்டம் பெற்றாள். திருமணத்திற்கு நாள் குறிக்கத் தொடங்கிய பொழுது, என் தங்கை மகன் 'ஏதாவது ஒரு உயர்நிலைப் பள்ளியில் படித்த பெண்ணைப் பாருங்கள், எனக்கு கல்லூரியில் படித்த பெண் வேண்டாம்' என்று கண்டிப்பாகக் கூறி விட்டான். கல்லூரியில் படித்த பெண்களை மணக்க கல்லூரியில் படித்த ஆண்களே மறுத்தால் என்ன செய்வது?

கைவிட்டு விட்டவர் : "என் பெண்ணுக்கு ஏன் திருமணம் நடக்கவில்லை என்று சிலர் என்னைக் கேட்கிறார்கள். என்னை ஏன் கேட்கிறீர்கள். இந்தக் கேள்வியை என் பெண்ணிடமே கேளுங்கள். அது அவள் விருப்பம் என்று சொல்லிக் கொண்டு இருக்கிறேன்."

கவலையற்றவர் : "கல்லூரியில் என் பெண்ணைப் படிக்கவைத்த அன்றே இனி உன் எதிர்காலத்தை நீயே தேடிக் கொள்ள வேண்டும் என்று சொல்லித்தான் படிக்க வைத்தேன். ஆகவே என் பெண்ணைப் பற்றி எனக்கு கவலையில்லை."

இவ்வாறு பலர் பலவாறு கூறுகிறார்கள். இவற்றையெல்லாம் கேட்டறிந்த பலர், நம் சமூகம் சரியாக இல்லை என்று மனம் புழுங்கி வாடுகிறார்கள்.

ஆகவே, உயர்நிலைப் பள்ளியின் உச்சத்தில், மேல் நிலைப்பள்ளியில் படிக்கும் பெண்கள் 'Y' எழுத்தில்

முச்சந்திப்பில் நிற்கிறார்கள். அவர்களுக்கு வலது புறம் ஒரு பாதையும், இடதுபுறம் ஒரு பாதையும் தெரிகிறது. எந்தப் பாதையில் போவது என்பதை இப்போதே சிந்தித்தாக வேண்டும்.

இடதுபுறம் செல்ல விரும்பும் பெண்களுக்கு, கல்லூரிப் படிப்புக்கு மூன்று ஆண்டுகள் வேண்டியது போல, குடும்பக் கலையைப் படிக்கவும் மூன்று ஆண்டுகள் வேண்டும். அதாவது சமையல் செய்வது எப்படி? குடும்பத்தில் உள்ள வர்களோடு பழகுவது எப்படி? உறவினர்களோடு பழகுவது எப்படி? விருந்தினர்களை உபசரிப்பது எப்படி? பிறரோடு பேசுவதும் பழகுவ்தும் எப்படி? உடம்பைப் பாதுகாப்பது எப்படி? என்பதைக் கற்று அறிந்து கொள்ள முதலில் மூன்று ஆண்டுகள் தேவைப்படும்.

பின்பு திருமணம் ஆன பிறகு கணவனோடு வாழ்வது எப்படி? மாமியார், மாமனார், கொழுந்தனார். நாத்தனார் ஆகியவரோடு பழகுவது எப்படி? சமூகத்தில் பழகுவது எப்படி? குடும்பத்தை நடத்துவது எப்படி? வரவுக்குத் தகுந்த செலவு செய்து சிக்கனமாக வாழ்க்கை நடத்தி பொருளை மிச்சப்படுத்தும் பொருளாதாரக் கலையில் சிறந்து விளங்குவது எப்படி? என்பதை நாளடைவில் கற்றுக் கொள்ளலாம். இதற்குப் பல ஆண்டுகள் வேண்டும். அவைகளைக் கற்றுக் கொள்ள பெற்றோர்களையே ஆசிரியர் களாகக் கொள்வது நல்லது.

> **''நல்ல குடும்பம் ஒரு பல்கலைக் கழகம்''**

என்பது பாரதிதாசனுடைய கருத்து.

> **''ஆண்களோடு பெண்களும் சரி நிகர் சமானமாக**
> **வாழ்வோம் இந்த நாட்டிலே''**

என்பது பாரதியார் வாக்கு. இதற்குப் பொருள் தெரிய எனக்குப் பல ஆண்டுகள் பிடித்தன.

மணப்பாறை சந்தையில் மாடு வாங்கப் போய் ஒரு பசுவை 150 ரூபாய்க்கு கேட்டுக் கொண்டிருந்தேன். வயது சென்ற பெரியவர் ஒருவர் என் கையைக் கிள்ளி, தனியே அழைத்துப் போய், ''பசுமாட்டை விலைக்கு கேட்டாயே, அதன் கழுத்தைப் பார்த்தாயா? அதில் கறுப்பு இருக்கிறதே'' என்றார். 'கறுப்பு இருந்தால் என்ன' என்று கேட்டேன். ''அவன் பசு மாட்டின் கழுத்தில் நுகத்தடியை வைத்து ஏரில் பூட்டி உழுதிருக்கின்றான்; ஏற்றில் பூட்டியும் நீர் இறைத்திருக்கின்றான்'' என்று அக்கறுப்பு தெரிவிக்கிறது. பசு மாட்டை ஏரில் பூட்டி உழுதால் மூச்சுக் கட்டி இழுப்பதன் மூலம் அதன் பால் சுரப்பிகள் பழுதுபடுகின்றன. அவை சரியாகப் பால்கறக்காது' என்று கூறினார்.

நான் வியந்து போனேன். ஏர் உழுவதும், நீர் இறைப்பதும் காளை மாட்டின் வேலைகள். கன்று போட்டுப் பால் கொடுப்பது பசுமாட்டின் வேலைகள். காளைமாட்டு வேலையைப் பசுமாடு செய்தாலும், பசு மாட்டின் வேலைகளைக் காளை மாடு செய்ய முடியாது காளை மாட்டின் உறுப்புகளும், பசுமாட்டின் உறுப்புகளும் வெவ்வேறு. எப்படி ஆணகளோடு பெண்களும் சரி நிகராக வாழ்வது என்ற ஐயம் மேலும் எனக்குத் தோன்றியது.

1930ல் சிங்கப்பூரில் ஒரு பேருந்தில் பயணம் செய்து கொண்டிருந்தேன். அதில் நான் ஒருவன்தான் தமிழன். மற்றவர்களெல்லாம் மலாய்க்காரர்களும், சீனர்களுமாக இருந்தார்கள். ஒரு திருப்பத்தில் ஒரு ஜப்பானிய இளம்

பெண், வயது 21 இருக்கும், அப்பேருந்தில் ஏறி கூட்டம் அதிகமாக இருந்ததால், கைப்பிடியை பிடித்து நின்று கொண்டு வந்தாள். என் அருகில் உட்கார்ந்திருந்த ஆங்கிலோ இந்தியர் ஒருவர் எழுந்து அப்பெண்ணை உட்காரும்படி கேட்டுக் கொண்டார். அப்பொழுது எனக்கு இந்தப்புத்தி வரவில்லையே என்று வெட்கப்பட்டேன். ஆனால் அப்பெண் உட்காரவில்லை. நின்று கொண்டே வந்தாள். இவர் மறுபடியும் அப்பெண்ணிடம் சென்று உட்காரும்படி கேட்டுக் கொண்டார். உடனே அப்பெண். "யூ சிடவுன் ப்ளீஸ், தயவு செய்து நீங்களே உட்காருங்கள்" என்று கோபமாகக் கூறினாள். அது மட்டுமல்ல "ஐரோப்பியர்கள் வஞ்சகர்கள்? பெண்களை பலவீனர்கள் என்று கருதிக் கேவலப்படுத்துகிறவர்கள். இனிமையாகப் பேசி ஏமாற்றுகிறவர்கள்" என்று வசைபாடத் தொடங்கி விட்டாள். பேருந்தில் இருந்த மற்றொருவர்" "அவரை, ஏனம்மா திட்டுகிறீர்கள். அவர் உங்கள் மீது இரக்கங் காட்டித் தானே உட்காரச் சொன்னார்?" என்று கூறினார். அதற்கு அப்பெண், "அவர் இரக்கமா காட்டினார். எனக்கு முன்னால் 75 வயது கிழவர் கைப்பிடியைப் பிடித்து தள்ளாடிக் கொண்டு நிற்கின்றார். அவரிடம் ஏன் அந்த இரக்கத்தைக் காட்டவில்லை" என்று சத்தம் போட்டாள. அந்த ஆங்கிலோ இந்தியர் எங்கு போக இருந்தாரோ அடுத்த நிறுத்தத்திலேயே இறங்கி ஓடிப் போய்விட்டார், "நான் முன்னே வந்திருந்தால் அந்த இடம் எனக்குச் சொந்தம். அவர் முன்னே வந்ததால் அவருக்குச் சொந்தம், அதுதான் சம உரிமை என்றும் கூறினாள். அப்பொழுது தான் நான் எழுந்து அந்தப் பெண்ணை உட்காரச் சொல்லாதது புத்திசாலித்தனம் என்று எனக்குப் பட்டது.

இந்த சிங்கப்பூர் பேருந்து நிகழ்ச்சிதான், "ஆண்களோடு பெண்களும் சரி நிகர் சமானமாக வாழ்வோம் இந்த நாட்டிலே"— என்ற பாடலுக்குப் பொருளை விளக்கியது. அது உண்பதிலும், உரிமையிலும்தான் என்பதும், உழைப்பில் அல்ல என்பதும் தெரிகிறது. இன்றேல் பாரதியார், "சரிநிகர் சமானமாக உழைப்போம் இந்த நாட்டிலே" என்று பாடியிருப்பார்,

இன்னும் ஒன்று. கல்லூரியில் படித்த பெண்கள் திருமணம் ஆகி இல்லறத்தை நடத்த முடியாதா? நடத்துகிறார்களே இதற்கு என்ன சொல்லுகிறீர்கள்? என்று சிலர் கேட்கலாம். அதுவும் சிந்திக்க வேண்டிய ஒன்றுதான். கல்லூரியில் படித்து வேலைக்கும் சென்று திருமணம் செய்து, குழந்தைகளைப் பெற்று வாழ்க்கை நடத்தும் மூன்று பெண்களின் வாக்கு மூலத்தைக் கேளுங்கள்.

ஒரு பட்டதாரி : ஐயா நான் ஒவ்வொரு நாளும் செத்துச் செத்து பிழைக்கின்றேன். காலையில் எழுந்ததும் பல் துலக்க, குளிக்க, உடை உடுத்த, தலை சீவ, சில நேரங்கள் தேவைப்படுகின்றன. அதே நேரத்தில் கணவனுக்கு வெந்நீர் வைக்கவும், காபி கொடுக்கவும் வேண்டியிருக்கிறது. பிள்ளைகளைக் குளிப்பாட்டி அவர்களுக்கு தலைசீவி உடையுடுத்தி பள்ளிக்கு அனுப்ப வேண்டிய வேலையும், அதே நேரத்தில் செய்ய வேண்டியிருக்கிறது. காலை சிற்றுண்டி, காபி தயாரிக்கவும், சாப்பிடவும், அலுவலகத்தில் சாப்பிட பகல் உணவை கணவனுக்கும், எனக்கும் தயாரிக்கவும். கட்டவும், அதே நேரத்தில் செய்ய வேண்டியிருக்கிறது. இத்தனையும் நான் செய்து கொண்டே அலுவலகத்தில் நான் செய்ய வேண்டிய பணிகளின் கோப்புகளையும், படிக்கவும். குறிப்பு எடுக்

கவும் வேண்டியிருக்கிறது. ஒவ்வொரு நாளும் நான் படுகின்ற துன்பம் கூறி முடியாது. எனக்கு வாழவில் அமைதியில்லை, சாவில்தான் அமைதி கிடைக்கும் போலிருக் கிறது.

மற்றொரு பட்டதாரி: என் நாகரிக வாழ்க்கை என். மாமியார் நாத்தனார்களுக்குப் பிடிக்கவில்லை. அதனால் முணுமுணுத்துக் கொண்டேயிருக்கிறார்கள். ஒரு படித்த பெண்ணை வைத்து, குடும்பம் நடத்தும் ஆற்றல், படித்துப் பட்டம் பெறாத மாமி, நாத்திகளுக்குச் சிறிதும் இருப்ப தில்லை. அதனால் நான் படித்துப் பட்டம் பெற்று வேலைக்குச் சென்று அலுவலகத்தில் படும் துன்பங்களை விட குடும்பத்தில் படும் துன்பங்களே அதிகமாக இருக்கின்றன. என்ன செய்வது?

இன்னொரு பட்டதாரி: என் கணவர் வேலைக்குப் போய் விடுகிறார். நானும் வேலைக்குப் போய் விடுகிறேன், வேலைக்காரி தான் பிள்ளைகளை வளர்க்கிறாள். எங்களுக்கும் சோறு சமைத்துப் போடுகிறாள். இது சத்திரத்து வாழ்க்கையாக இருக்கிறதே தவிர இல்வாழ்க்கையாக இல்லை. என்ன செய்வது?

முடிவுரை: அன்புள்ள மாணவிகளே, மேலே உள்ள வைகளைப் படித்துப் பார்த்த உங்களுக்கு, கல்லூரியில் படித்து, வேலைக்கும் சென்று, பெற்றோருக்கும் பெருமை தேடித் தந்து திருமணம் செய்து, குழந்தைகளையும் பெற்று, வீட்டு வேலைகளையும் செய்து அதோடு அலுவலகத்து வேலைகளைச் செய்யும் ஆற்றலும் இருக்குமானால் நீங்களும் 'Y' என்ற எழுத்தின் வலது பாதையில் நடந்து கல்லூரிக்குச் சென்று படித்துப் பட்டம் பெறலாம். அத்தகைய

ஆற்றல் உங்களுக்கு இல்லையானால் 'Y' என்ற எழுத்தின் இடது பாதையில் சென்று திருமணம் செய்து இல்லறத்தை இனிது நடத்தலாம். நீங்கள் உயர்நிலைப் பள்ளியில் படித்து முடித்த பிறகு இந்த ஆலோசனையை நான் கூறுகிறேன் என்பதற்கில்லாமல் நீங்களே சிந்தித்து முடிவுக்கு வருவது நல்லது. அதிலும் பெற்றோர்களோடும், பெரியோர்களோடும் கலந்து பேசி முடிவுக்கு வருவது இன்னும் நல்லது. இவற்றில் உங்கள் விருப்பம் போலச்செய்யக் கூடியதைச் செய்து சிறப்பெய்தி வாழுங்கள் என்று வாழ்த்துவதோடு இதனை முடிக்கின்றேன்.

Wrapper Printed at Mahin Printers, Chennai-1.